# கல்கி

## பொருளடக்கம்



குரோதி, ஆடி 4 ● ஜூலை 19







**மூஷிகர்:** நாடு சுதந்திரம் பெற்ற புதிதில் அரசாங்கத்துக்கு ஆலோசனை சொல்லும் குழுக்கள் ஏதோ பத்துப் பன்னிரண்டு இருந்தன. இன்று அத்தகைய குழுக்களின் எண்ணிக்கை 528 ஆக உயர்ந்திருக்கிறது! ஆலோசனைகள் கூறத்தான் இத்தனை குழுக்களா? கேட்பதற்குக் குழுக்கள் ஒன்றும் கிடையாதா?



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 51

# நமது அந்நியக் கொள்கை

ராஜாஜி

ஸ்ரீ ஜவாஹர்லால் அவர்களுடைய ஞாபகம் ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு நமது அந்நியக் கொள்கையை வகுத்தால் போதாது. அந்நியக் கொள்கை வகுப்பதில் மூன்று விஷயங்களைக் கவனிக்க வேண்டும். 1. நம்முடைய உள்நாட்டுச் செல்வ நிலையும் மக்களுடைய வாழ்க்கை நிலையும் என்ன என்பதை ஆராய்ந்து, நாம் தனித்து நின்று பாதுகாப்புச் செலவு முழுவதையும் ஏற்க முடியுமா என்ற அடிப்படையில் அந்நியக் கொள்கை உருவாக வேண்டும். 2. ஆசிய நாடுகளின் அரசியல் நிலையைக் கருத்தில் கொள்ளவேண்டும். 3. நம் அயல்நாட்டுக் கொள்கை வெளி உலக அரசியல் நிலைமையையொட்டி இருக்க வேண்டும்.

இவ்வாறு சிந்தித்துப் பார்த்தால் முன்பு நம்மை ஆண்ட பிரிட்டனுடனும், இன்றைய பெரும் மேற்கத்திய வல்லரசாகிய அமெரிக்காவுடனும், இவ்விரு நாடுகளின் நேச நாடுகளுடனும் உறுதியான முறையில்—சிறிதும் சந்தேகத்துக்கு இடமில்லாத முறையில்—இந்தியா நட்பு ஒப்பந்தம் பெறவேண்டும் என்பது திடமாக ஏற்படும். அமெரிக்காவுக்கும் ருஷியாவுக்குமிடையே இருந்து வந்த விரோதச் சூழ்நிலை மாறி வருவதை நாம் கவனிக்க வேண்டும். இன்று பிரிட்டனுடனும், அமெரிக்காவுடனும் நாம் நட்பு ஒப்பந்தம் செய்து கொள்வதற்குப் பனிப்போர் ஒரு குந்தகமாக இருக்கவில்லை. மேல் நாடுகளோடு நாம் ஒப்பந்தம் செய்து கொள்வதால் நம் ருஷிய உறவு குறைவுபட வேண்டியதில்லை.

அமெரிக்கா, பிரிட்டன், அவற்றின் நேச நாடுகள் ஆகியவற்றோடு கெட்டியான நட்பு கொள்வதால் நாம் பாகிஸ்தானுடனும் நெருக்கமான நல்லுறவு பெறலாம். இதுவே நமது தேவைகளில் முதல் முக்கியத்துவம் வாய்ந்தது. மேல்நாட்டு உறவும் பாகிஸ்தான் உறவும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்த விஷயம். இதில் எதை நாம் முதலில் அடைந்தாலும் அது மற்றதை வளர்த்துக் காக்கும்.

நாலாவது திட்டத்தில் நம் பாதுகாப்புக்காக 5,500 கோடி ரூபாய் தேவைப்படும் என மதிப்பிட்டிருக்கிறார்கள். இன்னும் ஓரிரு வருஷங்களிலேயே மீண்டும் பரிசீலனை செய்து இந்தப் பெரிய தொகையும் குறைவான மதிப்பீடு என்று சொன்னால் நாம் ஆச்சரியப்பட வேண்டாம். இது தவிர டம்பாச்சாரித் திட்டத்தின் மற்ற செலவினங்கள் வேறு. இவ்வளவுக்கும் வேண்டிய பொருள் செலவைத் திரட்டுவது சாத்தியமா? எவ்வளவு வரி போட்டாலும் மக்களால் அவற்றைத் தாங்க முடியும் என்று கற்பனை செய்தாலொழிய திட்டங்களையும், பாதுகாப்பையும் சுய பலத்தில் நிறைவேற்றிக் கொள்ள முடியும் என எண்ண இடமில்லை. தேச வருமானத்திலிருந்து நியாயமான வரிகளின் மூலம் எவ்வளவு வசூல் செய்யலாமோ அதுதான் நமது உண்மையான திரவிய சாதனம். பாதுகாப்புச் செலவுகளையும், திட்டச் செலவுகளையும் நிறைவேற்ற இந்த திரவிய சாதனம் ஒருகாலும் போதாது. வெளி நாடுகளின் நட்பின் மூலம் இந்தப் பாதுகாப்புச் செலவுகளை குறையச் செய்ய முடியும். அதுவே பிழைக்கும் வழி.

யாருடனும் கூட்டுச் சேரமாட்டோம் என்பதே நம் கொள்கை என்று கூறிப் பழைய முடிவைப் பிடிவாதமாக எடுத்துக் காட்டுவதில் பொருளில்லை. 'கூட்டுச் சேராக் கொள்கை' வகுத்தபோது சீனா நம்முடன் நட்புக் கொண்டிருந்தது. இன்றும் சீனா

நமது நட்பு நாடு என்று வைத்துக் கொண்டாலோ, அல்லது பாகிஸ்தானை விடச் சீனு நம்பகமாக நட்புக் கொள்ளக்கூடிய அண்டை நாடு என்று கருதினலோ ஒழிய நாம் அந்நிய நண்பர்களை உறுதியாகச் சார்ந்திருப்பதும் அவர்களுடன் கெட்டியான இணைப்புப் பெற வேண்டியதும் அத்தியாவசியம் என்பது விளங்கும். சீனவுடன் நட்புக் கொள்ளலாம் என்று நினைப்பவர்கள் இப்போதும் ஒரு சிலர் நம்மிடையே இருக்கிருர்கள். இது நிகழ்காலத்தில் சாத்தியபூர்வமானதல்ல. எல்லா நாடுகளும் ஐக்கியமாகி உலகம் முழுவதும் ஓர் அரசாக ஆனந்த சாம்ராஜ்யம் உருவாகும்போதுதான் நாமும் சீனவும் நேச நாடுகளாக இருக்க முடியும். உலக சாம்ராஜ்யம் ஏற்படும் காலம் கண்ணுக்கெட்டிய தூரத்தில் இல்லை. இந்தக் கனவை மனத்தில் வைத்துக் கொண்டு நிகழ்கால அவசியங்களைக் கவனிக்காது போனல் பொருளாதார ரீதியிலும், ராணுவ ரீதியிலும் அழிந்து போவோம். குருட்டுத்தனமோ கோணல் புத்தியோ கொண்டவர்களின் பேச்சைக்கேட்டு உலகசமாதானம் என்ற தொலை தூர நட்சத்திர மண்டலத்தை நோக்கி நடந்து நிகழ்காலத் திட்டத்தில் தடுமாறி விழாதிருப்போமாக!

'கூட்டுச் சேராக் கொள்கை' என்பது இன்று ஒரு வெற்றுச் சொற்றொடர் தானேயன்றி அது ஓர் அந்நியக் கொள்கையாகாது. 'நெருக்கடி நேரும் போது ஏதாவதொரு கோஷ்டியின் உதவியைப் பெற்றுக் கொள்ளலாம்; ஆனல் அதுவரையில் இரண்டு பிரிவுகளுடனும் நட்புடன் இருப்பதாகக் காட்டிக் கொண்டு, இரு பக்கத்திலிருந்தும் உதவி பெறலாம்' என்ற கருத்தில் தோன்றிய கூட்டுச் சேராக் கொள்கையைப் பற்றி நாம் பெருமைப்பட ஏதுமில்லை. 'கூட்டுச் சேராக் கொள்கை' என்ற சொற்றொடருக்குப் புதுப் பொருள்கள் கற்பித்துப் பார்ப்பதால் காரியத்தில் பலனளித்து விடாது. கழுதையும் குதிரையும் ஒன்று என்பது போல் 'எஸ்டேட்' என்பதற்குப் புதுப் பொருள் தந்து சாஸனத்தைத் திருத்துவதும், குதிரைகளைக் கழுதை விலைக்குக் கட்டாயக் கொள்முதல் செய்வதும் சுலபமாக இருக்கலாம். ஆனல், ஆபத்து நிறைந்த பாதுகாப்புத் துறையில் வார்த்தைகளுக்கு நூதன வியாக்கியானங்கள் செய்து அவற்றைப் பின்பற்றுவது பலனளிக்காது.

வரிகளின் விளைவும், பாதுகாப்புச் சக்தியும் ஒன்ருேடொன்று இறுக்கமாக இணைந்துள்ள நிலையில் நாம் இருக்கிருேம். வரிகள் உயர உயர அந்த அளவுக்கு நாட்டு மக்களின் உழைக்கும் திறனும், உற்சாகமும் குன்றி விடும் நிலை ஏற்பட்டுள்ளது. வரிச்சுமையால் மக்களின் சக்தி குறைந்து கொண்டே வருகிறது. நாட்டு மக்களின் சக்தியே நம் பாதுகாப்பு பலம். ராணுவத்தில் நவீன ஆயுதங்களை விருத்தி செய்வதால் மட்டும் பாதுகாப்புச் சக்தியை அதிகரித்துவிட முடியாது. அந்நிய நாடுகளிலிருந்து இதுவரை இறக்குமதி செய்துள்ள நவீன ஆயுதங்களாலும் இனி இறக்குமதி செய்யப் போகும் தளவாடங்களாலும் பிரச்னையைத் தீர்க்க முடியாது. மக்களின் உற்சாகம் குன்றிப் போய், பொருளாதாரம் சீர்குலைந்து விட்டால் அதன் பின் நம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்கு உபாயம் ஏது? அஸ்திவாரம் அசைந்த வீடுபோலாகும்.

வல்லரசுகளின் உதவியைப் பெறுவதற்கான காரியங்களைச் செய்து கொண்டே, 'கூட்டுச் சேர மாட்டோம்' என்று பிரசங்கம் செய்வது கேலிக்கிடமாகும். 'கூட்டுச் சேருவது' என்ற பிரச்னை இப்போது அவசியமில்லை. நட்புப் பெறுவதே இன்று பிரச்னை. மற்றவர்கள் நம்மை அழைத்தும், நாம் அவர்களுடன் சேர மறுத்த காலம் முடிந்து விட்டது. இப்போது நாமே மற்ற நாடுகளின் நட்பைத் தேடிப் போயாக வேண்டும். வல்லரசுகளின் பனிப்போருக்கு விறகு போட்டு வளர்க்காமல் அணைக்கச் செய்ய வேண்டுமென்ற கருத்துக்கு இப்போது இடமில்லை. வரிகளைச் சுமத்தி, தேசத்தின் சக்தியை உறிஞ்சாமல் நம் நாட்டைப் பாதுகாத்துக் கொள்வது அவசியம். 'கூட்டுச் சேராமை' என்ற வார்த்தையை விட முடியாது என்று கருதினல் நம்முடைய புதுக் கொள்கையைக் 'கூட்டுச் சேரா நட்பு' என்று பெயரிட்டு மேற்கு வல்லரசுகளுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். அதாவது எந்த வல்லரசுக் கோஷ்டியையும் பலவீனப் படுத்துவதற்காக இந்தியா இப்போது ஒரு நாட்டுடன் நட்புக் கொள்ளவில்லை; தன்னைப் பலப்படுத்திக் கொள்வதற்கே நட்பு உடன்படிக்கை செய்து கொள்கிறது என்று தெளிவுபடுத்தலாம். காலக்கிரமத்தில் இந்தத் திட்டத்தின்படி ருஷியாவுடனும் நட்பு கொள்ளலாம்.

மேற்கு நாடுகள் பாகிஸ்தானுக்குச் சாதகமானவை என்று நினைப்பது மதியீனம். நம் வீட்டு வரவேற்பு அறையில் மேஜை நாற்காலி எல்லாம் வாங்கிப் போட்டாகி விட்டால் அதன்பின் தரைக்கு விரிப்பு வாங்குவது ஒன்றைக் குறித்தேதான் சிந்தனையா யிருப்போம். இதனல் நமக்கு ரத்ன கம்பளப் பித்து

என்று சொல்வது சரியாகுமா? இந்தியா என்ற வீட்டைப் பத்திரப்படுத்துவதில் பாகிஸ்தானுடன் நட்புப் பெறுவதே எஞ்சியுள்ள காரியம் என்று மேற்கு நாடுகள் நினைப்பதால் அதைக் குறித்தே அதிகம் பேசுகின்றன. இதற்காக அவற்றைக் குறை கூறுவது சரியல்ல. சீனு, பாகிஸ்தான் இரு நாடுகளோடும் தனியாக நின்று நம்மால் ஆயுதப் போட்டியிடமுடியாது. சீனுவுடன் மட்டுமே போட்டியிடுவதும் நமக்கு இயலாது.

தெற்கு ஆசியாவில் கம்யூனிஸ்ட் சீனு முன்னேறி வருவதைத் தடுத்து நிறுத்துவது பற்றி நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். கம்யூனிஸப் பரவலைத் தடுப்பதில் அக்கறையுள்ளவர்களுடன் புத்திசாலித்தனமாக நாம் இணைந்து செயலாற்ற வேண்டும். அமெரிக்காவுடன் நட்பு ஒப்பந்தம் செய்து கொள்வதைவிட இதற்கு வேறு உபாயமில்லை.

நாட்டை முறைப்படி காக்க எது அத்தியாவசியம் என்ற உணர்ச்சியைப் பெற்று மற்ற தடங்கல்களையெல்லாம் மீறி அதற்காக உறுதியுடன் உழைக்க வேண்டும். இதற்காகத் தியாகங்கள் செய்யவும் தயங்கக் கூடாது. அந்நியக் கொள்கையை மாற்றியே ஆக வேண்டிய சூழ்நிலை வந்து விட்டது. நட்பு ஒப்பந்தங்கள் இல்லாமல் தனிச் சுய பலத்தில் நம்மைப் பாதுகாத்துக் கொள்ளலாம் என்று இன்னமும் நம்புவது அபாயகரமானது.

# ஐ. நா.வுக்கல்ல; காச்மீரத்துக்கே

**கா**ச்மீரத்தை ஐக்கிய நாட்டுச் சபையின் மேற்பார்வையில் ஒப்புவித்து அங்கு நல்லாட்சியை ஏற்படுத்த வேண்டும் என்பது சுதந்திரக் கட்சியின் கருத்து. எதிர்ப்பாளர்கள் 'காச்மீரின் ஆட்சி உரிமையை ஐ.நா.வுக்கு விட்டுக் கொடுக்கிறார்கள்' என்று குறை கூறுகிறார்கள். சுதந்திரக் கட்சி காச்மீரத்தை ஐ. நா. வுக்குக் கொடுக்க விரும்பவில்லை; காச்மீரத்தைக் காச்மீர மக்களுக்கே கொடுக்க வேண்டும்; அந்நாட்டின் ஆட்சி உரிமையை அதன் மக்களேதான் நிர்ணயிக்க வேண்டும் என்பது சுதந்திரக் கட்சியின் கருத்து. அந்தச் சுய நிர்வாகத்துக்கு பலம் தருவதற்கே ஐ. நா. தொடர்பு இருக்க வேண்டும் என்று கருதுகிறது. உலக சர்க்கார் அமைய வேண்டும் என்று பலர் பேசுகிறார்கள். அப்படி அமைவது எனில், இன்று ஒவ்வொரு நாட்டு மக்களும் எப்படித் தங்கள் உரிமைகளில் சிலவற்றைச் சர்க்காருக்குத் தருகிறார்களோ, அப்படியே ஒவ்வொரு நாட்டுச் சர்க்காரும் உலக சர்க்காருக்கு ஒருசில உரிமைகளை விட்டுக் கொடுத்தாக வேண்டும். என்றோ ஒரு நாளில் உலக சர்க்காராக உருப்பெறத் தகுதியுள்ள ஐ. நா. சபையிடம் இந்தியாவும் பாகிஸ்தானும் காச்மீரத்தைப் பற்றிய தமது உரிமைகளை விட்டுக் கொடுப்பது இதற்குப் பொருத்தமேயாகும்.

# ஏன் தயக்கம்?

**தெ**ற்காசியாவில் வலுவாக நடந்து வரும் கம்யூனிஸ விஸ்தரிப்பைப் பற்றி இந்தியா தடஸ்தமாக இருப்பது வருந்தத்தக்கது. இப்பகுதியின் வடக்குப்புறத்தில் வியட்நாமில் சீனக் கம்யூனிஸ்டுகள் முன்னேற யத்தனிக்கிறார்கள். முக்காலே மூன்று வீசம் கம்யூனிஸத்தைத் தழுவிவிட்ட இந்தோசீனு தெற்காசியாவின் தென்பகுதியாகிய மலேஷியாவை நெருக்குகிறது. நம்மால் காரிய ரீதியில் ஜனநாயக சக்திகளுக்கு உதவி செய்ய இயன்றாலும் இயலாவிட்டாலும் கம்யூனிஸ்டுகளின் எதிர்ப்புக்கு ஆளாகியுள்ள லாவோஸ், மலேஷியா இவற்றுக்கு இந்தியாவின் நல்லெண்ணம் உண்டு என்பதை நம் சர்க்கார் நிச்சயப்படுத்த வேண்டும். முக்கியமாக, மலேஷியப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் இந்தியாவில் சீனப் படையெடுப்பு நிகழ்ந்த அன்றே நமக்கு ஆதரவு அளித்துப் பேசியதை எண்ணிப் பார்க்க வேண்டும். மலேஷியாவில் இன்று நல்ல ஜனநாயகமும், நேர்மையான நிர்வாகமும் நடைபெறுகின்றன. பர்மா, இலங்கை முதலிய நாடுகள் எல்லாம் அங்குள்ள இந்தியர்களுக்குப் பலவிதத்தில் இன்னல் இழைத்து வருகையில் மலேஷியாவில் உள்ள இந்தியர்கள் நல்ல முறையில் நடத்தப்படுகிறார்கள். எனவே, மலேஷியாவுக்கு ஆத்மிக ரீதியில் நமது முழு உதவியையும் அளிக்க வேண்டியது அவசியம். இதைச் செய்வதற்கு இந்திய அரசாங்கம் ஏன் தயங்குகிறது?

# என்ன சேதி?

## வாழ்க காமராஜர்!

எளிமை, நேர்மை, உழைப்பு, ஊக்கம், நிர்வாகத் திறன், அரசியல் சாமர்த்தியம் இவற்றில் சிறந்து விளங்கும் திரு காமராஜ் அவர்கள் அகில இந்தியத் தலைவர்களில் ஒருவராகப் பரிணமித்து அறுபத்துஇரண்டாம் பிறந்த நாள் விழாவுக்குப் பாத்திரராகியிருக்கிறார். திரு காமராஜ் அவர்கள் நீண்ட காலம் வாழ்ந்திருந்து நாட்டை நல்ல வழியில் திருப்ப இறைவன் அருளைப் பிரார்த்திக்கிறோம்.

## இந்திய மருத்துவத்தின் கதி

சென்னையிலுள்ள இந்திய மருத்துவ வைத்திய விடுதியைத் திருக்குற்றாலத்துக்கு மாற்றிவிட முயற்சி நடந்து வருகிறது. இந்த ஆஸ்பத்திரியில் நாளொன்றுக்குச் சராசரி 800 பேர் வைத்திய உதவி பெற்று வருகிறார்கள். இந்த ஒரு புள்ளிக் கணக்கே போதும் இதை இவ்விடத்தை விட்டு மாற்றுவது எவ்வளவு பெரிய அநீதியான செயல் என்று தெளிவுபடுத்த. சென்னை மேயர் திரு கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இவ்விஷயத்தில் பொதுமக்களின் கவனத்தை ஈர்க்க ஒரு கூட்டம் நடத்தினர். ஸ்ரீ கே. பாலசுப்ரமண்ய அய்யர் இக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் சென்னையில் நடைபெற்று வந்த இணைப்பு வைத்தியக் கல்வியை அரசாங்கம் எப்படிச் சிறுகச் சிறுக அழித்தது என்னும் வரலாற்றைக்கல்லும் உருகக் கூறினர். நாவலர் நெடுஞ்செழியன், திரு அன்பழகன், திரு அண்ணுதுரை ஆகிய அனைவரும் இந்திய வைத்திய விடுதி சென்னையில் இருக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்திப் பேசினர்கள். பல கட்சிகளைச் சேர்ந்தவர்களும் விரும்பும் ஒரு காரியத்தைச் சர்க்கார் அலட்சியப்படுத்தக் கூடாது. 'செய்தாரில் பெரியர் சிதையாதவர்.'

## ஹிந்தி வெறியின் தீவிரம்

அகில இந்திய பப்ளிக் ஸர்வீஸ் கமிஷனின் பரீட்சைகளை ஹிந்தியிலும் நடத்த வேண்டும் என்ற திட்டம் ஹிந்தி ஏகாதிபத்தியத்தின் பட்சபாதக் கொள்கைகளில் மேலும் ஓர் அடி வைத்ததாகும். ஹிந்தியைப் புகுத்துவதில் சர்க்கார் இலாக்காக்கள் போட்டி போட்டுக் கொண்டு தீவிரம் காட்டுகின்றன. புதிய நாணயங்களில் ஹிந்தியில் மட்டும் வாசகங்கள் பொறித்திருப்பது இதற்கு ஓர் அடையாளமேயாகும்.

இந்தச் சூழ்நிலையில் சர்வகலாசாலை மானியக் கமிஷன் மட்டும் ஹிந்தித் திணிப்பைத் தைரியமாக எதிர்த்து வருகிறது என அறிந்து மகிழ்கிறோம். சர்வகலாசாலைப் பரீட்சைகளை ஆங்கிலம், ஹிந்தி இரு மொழிகளிலும் எழுதுவதானல், இரு வேறு அடிப்படைகளில் தேர்வு நடைபெறும் என்றும் இதனல் பட்சபாதம் நேரிடக் கூடும் என்றும் மானியக் கமிஷன் கல்வி மந்திரி இலாகாவுக்குத் தெரிவித்திருக்கிறதாம். இதே ஆபத்துத்தான் பப்ளிக் ஸர்வீஸ் கமிஷன் பரீட்சைகளிலும் நிகழவிருக்கிறது. ஹிந்தி வெறியர்களின் தீவிரத்திலிருந்தும், நம் ராஜ்ய மந்திரிகளின் தூக்கத்திலிருந்தும் மக்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்.

## கோபுரம் எழும்பட்டும்!

வன்னிய தேனும்பேட்டையில் உள்ள பாலசுப்பிரமணிய ஸ்வாமி ஆலயம், சென்னை மாநகரில் ஆத்மிகத்தைப் பரப்பும் கருவூலங்களில் முக்கியமான ஒன்ருகும். எப்போதும் உற்சவமும், உபந்நியாசமும் நடந்தவாருக இருக்கும் தர்ம நிலையம் அது. இந்த ஆலயத்துக்கு ராஜ கோபுரமும், சந்நிதிகளுக்கு விமானங்களும் எழுப்பிக் கும்பாபிஷேகம் நடத்த அன்பர்கள் பலர் நன் முயற்சி எடுத்து வருகின்றனர். நிர்மாணப் பணியும் படிப்படியாக இனிதே நடந்தேறி வருகின்றது. அதனை நிறைவேற்றி ஆலயத்துக்குக் கும்பாபிஷேகம் செய்விக்க இன்னும் சுமார் ஒரு லட்சம் ரூபாய் தேவைப்படுகிறது. இதற்காக மயிலாப்பூர் வேங்கடேச அக்கிரகாரத்தில் பிரவசனத் தொடர்கள் ஏற்பாடாகியுள்ளன. இம்மாதம் 15ந் தேதியிலிருந்து திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் கந்தபுராண விரிவுரைகள் நிகழ்த்துகிறார்கள். பின்னர் ஸ்ரீமதி சிவானந்த விஜயலக்ஷ்மி அவர்களின் ராமாயண திரிவேணி நடைபெறப் போகிறது. அன்பர்கள் யாவரும் பிரவசனங்களைக் கேட்டுப் பயன் பெறுவதுடன், ஆலயப் பணிக்கும் கைங்கரியம் செய்து ஆறுமுகனின் அருளைப் பெற வேணும். பொருளுதவிகள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீமதி மதுரம் கோபாலகிருஷ்ணன், 'உமா', 3, ராணி சின்னம்பாசாலை, சென்னை-18

# புரளிப் பிரசாரம்

கொழும்பு, ஜூலை 9உ.

யாழ்ப்பாணத்தில் இலங்கை இந்திய நட்புறவுச் சங்கத்தை நிறுவத் திட்டமிட்டிருந்த சில யாழ்ப்பாணத் தமிழ்ப் பிரமுகர்கள் ஆரம்பவிழாவுக்கு இந்திய ஹைகமிஷனர் திரு வி. கே. கபூரை அழைத்திருந்தார்கள். இதில் அதிசயமானதோ தவறானதோ ஏதுமில்லை. இந்திய ஹைகமிஷனர் பேசியபொழுது உள்நாட்டுப் பிரச்னையான மொழித் தகராறுகளைப் பற்றித் தாம் அபிப்பிராயம் கூறுவது முறையல்லவென்றும் ஆயினும் கூடிய சீக்கிரம் இப் பிரச்னைக்கு ஒரு நல்ல தீர்வு ஏற்படும் என்று நம்புவதாயும் சொன்னார். ஆனால் இந்திய ஹைகமிஷனருக்கு உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது சிலருக்கு வயிற்றெரிச்சலை உண்டுபண்ணி விட்டது போலிருக்கிறது. இதன் விளைவாக, அவர் ராஜரீகக் கட்டுப்பாடுகளை மீறி இலங்கையின் உள்நாட்டுப் பிரச்னை பற்றிப் பேசியதாயும் இது முறையற்றதென்றும் சில பத்திரிகைகள் விஷமப் பிரசாரம் செய்துள்ளன.

இந்தியத் துவேஷத்தில் பழகிப்போன திரு கே. எம். பி. ராஜரத்னா, திரு ஆர். ஜி. சேனநாயகா முதலியவர்கள் இந்தியா மீது வசை பாடி ஆர்ப்பாட்டம் செய்யத் தொடங்கி விட்டார்கள். இலங்கையை ஆக்கிரமிப்பதும் திருகோணமலைத் துறைமுகத்தைக் கைப்பற்றிக் கொள்ளுவதும்தான் இந்தியாவின் லட்சியம் என்றும், ஏற்கனவே இந்திய ராணுவத்தினர் கள்ளத்தனமாக இலங்கைக்கு வந்து இங்குள்ள இந்திய தோட்டத் தொழிலாளருக்கு யுத்தப் பயிற்சி யளித்து வருவதாயும், இந்திய ஹைகமிஷனர் யாழ்ப்பாணத்துக்குச் சென்றது அங்கு ஒரு யுத்தப் பாசறையை நிறுவுவதற்காகத்தான் என்றும் எழுத அவர்கள் தலைப்பட்டு விட்டார்கள். கூட்டு அரசாங்கத்தில் இந்திய ஆதரவாளர்களான சமசமாஜக் கட்சியினர் இருப்பதால் அவர்கள் மூலமாக இலங்கை இந்தியர் பிரச்னைக்கு ஒரு சமரச உடன்பாடு ஏற்படக் கூடாதே என்ற துர் எண்ணத்தில் இந்தியாவைத் தாக்குவது போலத் தாக்கி, இலங்கை இந்தியப் பிரச்னையைக் குழப்பி, ஒரு சமரச உடன்பாடு ஏற்பட முடியாமல் தடுத்து, கூட்டு அரசாங்கத்தின் மீது ஒரு கெட்ட அபிப்பிராயத்தை ஏற்படுத்த முயற்சி செய்கிறார்கள்.

## பொறுப்பற்ற பேச்சு

இலங்கை பல்கலைக்கழக மாணவிகளுடைய அழைப்பின்மீது இலங்கைக்கு வந்த ஸ்ரீமதி லட்சுமி மேனன் இங்கிருந்து இந்தியாவுக்குத் திரும்புமுன் பத்திரிகை நிருபர்களிடம் பேசினார். இந்தியாவிலிருந்து இலங்கைக்கு வந்துபோன வேறு எந்த அரசியல்வாதியும் பேசியிராத பொறுப்பற்ற முறையில் பேசி, இருபத்தைந்து லட்சம் தமிழ் மக்களுக்கு மிகுந்த மனவேதனையை அளித்திருக்கிறார்.

இலங்கையில் உள்ள இந்தியர்களும் தமிழர்களும் சிங்களம் கற்றுச் சிங்கள மக்களுடன் ஒன்றிப் போய்விட வேண்டுமென்றும் இவ்விதம் தேசிய ஒருமைப்பாடு உருவானால் மட்டுமே இலங்கை ஒரு பலமுள்ள தேசமாகத் திகழ முடியுமென்றும் ஸ்ரீமதி மேனன் கூறினார். இதற்கு அவர் கூறிய காரணம் விநோதமானது. இந்தியாவில் நாடு சுதந்திரமடைந்த பின்னர், மொழிப் பித்து நீங்கி ஹிந்தி மொழி தேசிய மொழியாக நாடு முழுதும் அங்கீகரிக்கப்பட்டுவிட்டதாம். அதே போல் ஈழத்திலும் நடைபெற வேண்டுமாம்!

ஹிந்தி மொழியை அகில இந்தியாவும் ஏற்றுக் கொண்டு விட்டதென்றால் தென்னிந்தியாவில் ஹிந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி இன்றைக்கும் நடப்பானேன்? சமீபத்திய சென்னை மாநகராட்சித் தேர்தலில் தி. மு. க. மெஜாரிட்டி பெறுவானேன்?

## சிம்மாசனப் பிரசங்கம்

கடந்த நான்கு ஆண்டுகளுக்கிடையில் தேசியப் பொருளாதாரம் சகல வகைகளிலும் சீர்குலைந்து போய் விட்டது. பார்லிமெண்டிலும் ஆளும் கட்சியின் மெஜாரிட்டி பேராபத்தை விளைவிக்கக்கூடிய அளவுக்கு இரண்டே இரண்டு ஓட்டுகளுக்கு வந்து விட்டது. இந்த நிலையில் அரசாங்கம் அடுத்த பொதுத் தேர்தலை எதிர்நோக்க முடியாது. எனவே சமசமாஜக் கட்சியின் ஆதரவைத் தேடிப் பெற்றுப் பார்லிமெண்டைக் கூட்டியிருக்கிறது. தீவிர சோஷலிஸ்டுகளான சமசமாஜக் கட்சியின் பதினான்கு அம்சத் திட்டத்தை ஆளும் கட்சி ஏற்றுக்கொண்டிருப்பதுடன் பார்லிமெண்ட் திறப்புவிழாவின்போது நிகழ்த்தப்பட்ட சிம்மாசனப் பிரசங்கத்திலும் இந்தப் பதினான்கு அம்சத் திட்டத்துக்கு இடம் தந்திருக்கிறது. அத்தியாவசியப் பொருள்களின் இறக்குமதி முழுவதையும் அரசாங்கம் எடுத்துக் கொள்ளுவது, வர்த்தகம் முழுவதையும் இலங்கையர் மயமாக்குவது ஆகிய பல யோசனைகள் சிம்மாசனப் பிரசங்கத்தில் இடம் பெற்றிருக்கின்றன. இலங்கையில் இந்தியர்கள் இனி தொடர்ந்து தொழில் நடத்த முடியாத நிலை விரைவில் உருவாகக் கூடும். அவர்களுக்கு ஏற்றுமதி இறக்குமதி லைசென்ஸ் இல்லையென்றாகி விட்டால் பிறகு அவர்கள் கடைகளைக் கட்டுவதைத் தவிர வேறு என்ன வழி?

தமிழ் மொழிக்கு அரசாங்க நிர்வாகத்தில் நியாயமான அந்தஸ்தை அளிக்கும் சட்டம் விரைவில் அமுல் நடத்தப்படுமென சிம்மாசனப் பிரசங்கத்தில் குறிப்பிட்டிருப்பது சமசமாஜக் கட்சித் தலைவர் டாக்டர் பெரேராவின் தூண்டுதல் பேரில்தான் என்று கருதப்படுகிறது. மொழிப் பிரச்னையைச் சுமுகமாகத் தீர்ப்பதற்கான அறிகுறி சிம்மாசனப் பிரசங்கத்தில் அடங்கியிருப்பதனால் தமிழரசுக் கட்சி பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் முன்பு உத்தேசித்ததுபோல் பதவி துறக்க மாட்டார்கள் என்றும் காத்திருந்து பார்ப்பார்கள் என்றும் இப்பொழுது நம்பப்படுகிறது.

— ரஜனி



# பனாமா

## இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை

Panama

20

CIGARETTES

Specially blended for a cool and pleasant smoke from selected Virginia Tobacco leaves.



*பிரத்தியேகத் தயாரிப்பாளர்கள்:*

**கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்., பம்பாய்.56**

**பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது**

GT. (P) 633 TH

Greens' Advtg.



# படம் பிடிக்கும் பெருந்தகை

திரை மறைவில் இருந்துகொண்டு இன்றியமையாத தொண்டு புரிபவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களுள் புகைப்படக் கலைஞர்களை முக்கியமாகக் குறிப்பிட்டாக வேண்டும். காமிராவை இங்கும் அங்கும் ஓட்டிப் படம் பிடிக்கும் ஒளிப்பதிவுக் கலைஞர்களைப் பற்றிக் கூறவில்லை. **Still Photographs** தயாரிப்பவர்களைக் கூறுகிறேன். தியேட்டரில் காட்டுவதற்குப் படம் தயாரிப்பவர் ஒளிப்பதிவாளர். பத்திரிகைகளில் விளம்பரம் செய்வதற்கும், தியேட்டர்களில் நடிக, நடிகையர்களின் தத்ரூபமான தோற்றங்களை வண்ணப்படமாக நிறுத்தி அலங்காரம் செய்வதற்கும், சினிமா நட்சத்திரங்களின் அழகு அழகான படங்களைக் காலண்டர்களில் போடுவதற்கும் பேருதவியாயிருப்பவர்கள் இந்தப் போட்டோகிராபர்கள்தான்!

திரு ஆர். என். நாகராஜ ராவ் மேற்படி போட்டோகிராபர்களின் வரிசையில் முன்னிற்பவர். மெக்கானிகல் இன்ஜினியரிங் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறிய இவர் வால்கார்ட் பிரதர்ஸில் இரண்டு ஆண்டுகள் வேலை பார்த்தார். அப்பொழுது முதலே இவருக்குப் போட்டோப் பிடிப்பதில் பயிற்சி உண்டு. சென்னை ஸ்கூல் ஆப் ஆர்ட்ஸில் உதவிப் பிரின்ஸிபாலாக இருந்த ஸ்ரீ வி. ஆர். சித்ராவிடம் போட்டோக் கலையைப் பயின்றார். ''ஹிந்து'' பத்திரிகையில் புகைப்படக் கலைஞராக ஓராண்டு இருந்துவிட்டுப் பிறகு ''சுதேசமித்திர''னில் பதினைந்து ஆண்டுகள் போட்டோகிராபராயிருந்தார். அங்கிருந்து ஜெமினி ஸ்டுடியோவுக்குப் போனார்.

நட்சத்திரங்களின் புகைப்படங்களைத் தத்ரூபமாக எடுப்பதோடு அவர்களது அழகுக்கு மெருகு ஊட்டும் விதத்தில் அதியற்புதமாக்குவதில் திரு நாகராஜ ராவ் தனித் திறமை பெற்றவர். எந்தக் கோணத்திலிருந்து படம் பிடித்தால் எடுப்பாயிருக்கும் என்பதை அவர் கலைக் கண்கள் என்றுமே தவற விட்டதில்லை.

திரு நாகராஜ ராவ் எந்த நிகழ்ச்சிக்கு வந்தாலும் அவர் கையில் காமிரா இருக்குமே தவிர அவர் அதை எப்போது இயக்குகிறார் என்பதை அறிய முடியாது. ஸ்டுடியோக்களில் படப்பிடிப்பு நடந்து கொண்டிருக்கும்போது அவர் தம் வேலையைப் படபடப்போ, பதற்றமோ இல்லாமல் செய்து கொண்டிருப்பார்.

சிறந்த ஓவியக் கலைஞரான ''மாலி'' இவரிடம் போட்டோக் கலையைப் பயின்று சிறந்த போட்டோகிராபராக விளங்கினார். இவரது ஒன்றுவிட்ட சகோதரரான திரு மாருதிராவ் இவருடைய சிறந்த சீடர். இப்பொழுது ஏ. வி எம். ஸ்டுடியோவில் ஒளிப் பதிவுக் கலைஞராயிருந்து பெரும் புகழுடன் பணியாற்றுகிறார்.

''எங்கள் வேலைக்குக் கற்பனையும், சிந்தனையும் அதிகம் தேவை. சினிமா 'ஸ்டில்ஸ்' களுக்கென்று ஒரு தனிக் கவர்ச்சி உண்டு. கலைநோக்கோடு காமிராவைத் தட்டவேண்டும். குறிப்பிட்ட நடிகரின் முகபாவங்களிலுள்ள விசேஷ அம்சத்தைப் போட்டோ பளிச்சென்று எடுத்துக் காட்ட வேண்டும்'' என்றார் திரு நாகராஜ ராவ்.

''உங்கள் வேலையில் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய விஷயம் இன்னும் ஏதேனும் உண்டா?''

'''ஸ்டில்ஸ்' தயாரிக்கும் காமிராக்காரர்களுக்கு முக்கியமாகத் தேவைப்படுவது அழகு உணர்ச்சி. ஓடும் படத்தின் நகல் அல்லவா 'ஸ்டில்ஸ்'! படத்தின் தரத்தை நிர்ணயிக்க அது ஓரளவு முக்கிய பொறுப்பு வகிக்கிறது. அயல்நாட்டுக் கச்சா பிலிம், படங்களைப் 'பிரிண்ட்' போடும் பேப்பர் ஆகியவை போதுமான அளவுக்குக் கிடைக்காத காரணத்தால் இந்தத் துறையில் சிரமங்கள் மலிந்துவிட்டன. என் வேலையை மேலும் உயர்வாகச் செய்ய வேண்டும் என்ற அவா என்னை உந்திக்கொண்டே யிருக்கிறது.''

புகைப்படக்கலை நிபுணரான திரு நாகராஜ ராவ்தான் இவ்வாறு கூறினார்! இத்தகைய கலை விநோதர்கள் இருக்கும் வரை தமிழகம் எதிலும் தனிச் சிறப்புடன் விளங்கும் தகுதியைப் பெறும். — **விஜயம்**



## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# வெற்றியின் தோல்வி

சக்கரவர்த்திக்கு உடல்நலம் கெட்டுவிட்ட செய்தி வெளியில் எங்கும் பரவிவிடாதபடி பாதுகாக்கப்பட்டது. முக்கியமான அதிகாரிகளுக்கும் அந்த மாளிகையில் இருந்தவர்களுக்குமே அந்தச் செய்தி தெரியும். மருத்துவம் இரவு பகலாய் நடந்து கொண்டிருந்தது. கங்காபுரித் தலைநகரத்திலிருந்து இராஜ ராஜனின் தாயாரான புவன முழுதுடையார் மட்டிலும் சக்கரவர்த்திக்கு அருகிலிருந்து பணிவிடைகள் செய்ய வந்திருந்தார்.

மருத்துவர்களின் உழைப்பைவிட, அரசியாரின் ஆறுதல் மொழிகளாலும் பணிவிடைகளாலுமே அவர் சிறிது சிறிதாகத் தேறி வந்தார். உடல் நோய் என்று நம்பிப் பல வகை மருத்துவங்களையும் செய்து வந்தார்கள் மருத்துவர்கள். அரசியாருக்கு மட்டிலும் அந்த நோயும் அதன் காரணமும் விளங்கிவிட்டன. மருந்தாகவே மாறிப் போய்க் குலோத்துங்க சக்கரவர்த்தியின் உள்ளத்துக்குள் உறையத் தொடங்கினார் அவர்.

''தேவி! இந்தப் புவனம் முழுதுக்கும் நான் சக்கரவர்த்தியாய் இருப்பதில் மகிழ்ச்சி கொள்வதைவிட, இந்தப் புவன முழுதுடையாளுக்குத் தலைவனாக இருப்பதில்தான் மிகுதியாக மகிழ்ச்சி அடைகிறேன்!'' என்று நன்றிப் பெருக்கோடு கூறினார் அவர். அவருடைய உள்ளம் நன்றிப்பெருக்கால் அப்போது பொங்கி வழிந்து கொண்டிருந்தது. சாம்ராஜ்யத்தின் சுமைகள் யாவையும் அவர் மட்டுமே சுமப்பதாகத்தான் உலகம் நினைத்தது. ஆனால் அரசியாரின் மனமொத்த தியாக வாழ்வால்தான் அவர் தியாக விநோதராகவே விளங்க முடிந்தது.

''இராஜ ராஜனைப் பற்றிய கவலை தங்களை வீணாக வாட்டிக் கொண்டிருக்கிறது'' என்று கூறினார் அரசியார்.

'' 'வீணாக' என்று சொல்கிறாயா?''

''ஆமாம், தங்களுடைய உயரத்திலிருந்து கொண்டு அவனைத் தாங்கள் காணுகிறீர்கள். இந்த இளம் பருவத்திலேயே அவன் தங்கள் உயரத்துக்கு வளர்ந்துவிட முடியுமா?''

''என்னைப் போலவே எனக்குப் பின்னாலும் அவன் கையில் நாடு பத்திரமாக இருக்குமென்று நீ நம்புகிறாயா...?''

''தங்களுக்குப் பின்னால் என்ற சொல்லை இனிமேல் என்னிடம் கூறாதீர்கள்'' என்று குரல் தழுதழுக்கக் கூறினார் அவர். ''ஆனால் அவனுக்கென்று பொறுப்புகளும் கடமைகளும் பெருகும் காலத்தில் அவன் ஒன்றும் கோழையாகிவிட மாட்டான். நமக்குப் பிறந்தவனல்லவா அவன்?'' என்றார் அரசி.

# கயல்விழி

**அகிலன்**

உன்னிடம் இருக்கிறது. அதற்காகத் தான் உன்னை இங்கு வரவழைத்தேன்.''

எழுபது வயதைக் கடந்தவர் குழந்தையானுர். அறுபது வயதைக் கடந்தவர் அந்தக் குழந்தையிடம் கொஞ்சினுர். 'இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை' என்ற குறளை மெய்ப்பிக்கப் பிறந்த உத்தமி அவர். நினைவெல்லாம், சொல்லெல்லாம், செயலெல்லாம் குலோத்துங்கருக்காகவே காணிக்கையாக்கியவர். அவரது அன்புதான் தம் மூலமாகச் சாம்ராஜ்யத்



குலோத்துங்கர் மெல்லச் சிரித்தார். ''உனக்கே நம் குமாரனிடம் நம்பிக்கையில்லை என்று எனக்குத் தெரியும். தெரிந்தும் எனக்கு ஆறுதல் வேண்டுமே என்பதற்காக இப்படிச் சொல்கிருய். இதையே நீ நூறு முறை என்னிடம் திருப்பிச் சொல்! உன்னுடைய இந்த அன்புச் சக்தியை நீ எப்போதும் எனக்குக் கொடுத்துக் கொண்டேயிருக்கிருய். என்னை உன்னுடைய சின்னஞ் சிறு குழந்தையாக மாற்றி விடக் கூடிய வசீகரம் ஒன்று

தையே கட்டிக் காத்தது என்று சக்கரவர்த்தி முழு மனத்தோடு நம்பினுர்.

பாண்டிய நாட்டில் அப்போது நடந்து கொண்டிருந்த அரசியல் விஷயங்களை அவர்கள் இருவரும் அந்தரங்கமாகப் பரிமாறிக்கொண்டார்கள்.

இளவரசன் சுந்தர பாண்டியனைக் கொன்று விட்டதால் நாடு எங்கும் மக்கள் அஞ்சி ஒடுங்குவார்கள் என்று நினைத்தது போக, எங்குமே குமுறி

எழுந்து கொண்டிருக்கிறார்களாம். இன்னும் குலசேகர பாண்டியர் எங்கு மறைந்திருந்தார் என்று யாருக்கும் தெரியவில்லை. அவரைக் கண்டுபிடிக்கச் செய்த முயற்சிகள் யாவும் வீணாகி விட்டன.

''மந்திரச் சொற்களில் உனக்கு நம்பிக்கை இருக்கிறதல்லவா?'' என்று கேட்டு விட்டு, ''எனக்கு நம்பிக்கை உண்டு!'' என்றார் அவர்.

''எனக்கு ஒரே ஒரு மந்திரந்தான் தெரியும்; ஆனால் அதை வாய் விட்டு நான் உச்சரிக்க முடியாது!'' என்றார் தேவியார். குலோத்துங்கரின் பெயரை அவர் எப்படி வாய் விட்டுச் சொல்வார்?

''சுந்தர பாண்டியன் என்ற சிறுவன் இரண்டே இரண்டு வாக்கியங்களை இந்தப் பாண்டிய நாடு முழுவதும் பரப்பி விட்டுப் போயிருக்கிறான். நம்மால் அவனை அழிக்க முடிந்ததே தவிர, அவன் சொற்களை அழிக்க முடியவில்லை. தெற்கே நம் படைகளை அனுப்பி வைத்தேன், நாட்டில் நம் ஆட்சியை நிலைநாட்டலாமென்று. ஆனால் குடிமக்களும் வளநாட்டுத் தலைவர்களும் நம் படைகளைத் திடீர் திடீரென்று வளைத்துக் கொள்ளுகிறார்களாம். மதுரையில் பெண்களுக்குத் தீங்கிழைக்கப்பட்ட செய்தி வேறு ஒன்றுக்கு நூறாக உள்நாட்டில் பரவியிருக்கிறது. வழக்கமாக அஞ்சி ஒதுங்கும் பெண்டிர் நம்முடைய படைகளுக்குப் பேய்களாக மாறி விட்டார்களாம்.''

நிலைமையை ஓரளவு விளங்கிக் கொண்ட அரசியார், ''சுந்தர பாண்டியன் கூறிய செய்தி என்னவென்று தாங்கள் கூறவில்லையே?'' என்றார்.

''நாங்கள் அழிந்துபடுவோம்; ஆனால் அடிமைகளாக மாட்டோம்!''

''சொல்லுக்கு மட்டும் தனியே வலிமை இருக்காது; அதைச் சொல்லியவனும் வல்லவனாக இருந்திருக்க வேண்டும்'' என்றார் அரசி.

''ஆமாம், அவனும் வல்லவன் தான்'' என்றார் சக்கரவர்த்தி. ''சொல்லியபடியே அவன் அழிந்துபட்டான்; ஆனால் அவன் சொல்லை மக்கள் அழிய விட மாட்டார்கள் என்று தோன்றுகிறது. இந்தச் சூழ்நிலையில் இந்த நாட்டை நேரடியாக நம்மால் ஆள முடியாது.''

அரசியார் மௌனம் சாதித்தார். பாண்டிய நாட்டை வென்ற பிறகு அதற்குத் தலைவனாக இராஜஇராஜனைச் செய்யலாம் என்று சக்கரவர்த்தி எதிர்பார்த்திருக்கக் கூடும். ஆனால் அவனோ தன் பெயரைக் கேட்ட அளவிலேயே மக்கள் தன்னை வெறுக்கும்படி செய்து கொண்டு விட்டான். பாண்டிய நாடும் அழிவதற்குத்தான் துணிந்து நின்றது. சோழர்களின் ஆட்சியை அது பொறுத்துக் கொள்ளப் போவதில்லை.

''தாங்கள் படைத் தலைவர்களுடன் ஆலோசனை நடத்தியிருப்பீர்களே!''

''நம்முடைய எல்லாப் படைகளும் சில மாதங்கள் பாண்டிய நாட்டில் தங்கியிருந்தால், சிறிது சிறிதாக ஆட்சியை உருவாக்கலாம் என்கிறார். சயங்கொண்ட சோழ வல்லபர் மூலமாகச் சில துரோகிகளைப் பிடித்து நம் கையாட்களாக மாற்றிக் கொள்ளலாம்.''

''தாங்கள்தாம் எப்போதுமே இது போன்ற சிறு பொறுப்புக்களில் சக்தியை விரயம் செய்வதில்லையே!'' என்று மிகச் சாதுரியமாகப் பேசினார் அரசியார். அந்தப் பேச்சு அவருக்குப் பிடித்திருந்தது என்றாலும் அரசியாரின் நோக்கம் குலோத்துங்கருக்கு விளங்கவில்லை.

''நீ என்ன சொல்கிறாய்?''

''தங்களுக்கு ஆலோசனை கூறும் தகுதி எனக்கு எங்கே இருக்கிறது?'' என்று கேட்டு விட்டு, ''சாம்ராஜ்யத்துப் படைகள் எல்லாமே இங்கு இருந்தால், அதன் பாதுகாப்பைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்; மேலும் நாமோ இங்கு வெற்றி பெற்று விட்டோம் ; ஆட்சிப் பொறுப்பையும் சுமந்து அல்லல்படுவதற்குரிய பலனும் நமக்குக் கிடைக்காது'' என்று முடித்தார்.

பாண்டிய நாட்டில் குலோத்துங்கர் பெற்ற வெற்றி இப்போது உடும்புப் பிடியாக அவரைப் பற்றிக் கொண்டு விட்டது. 'உடும்பு வேண்டாம்; அது கையை விட்டால் போதும்' என்று உதறும் அளவுக்கு அவருடைய செருக்கும் இடம் கொடுக்கவில்லை.

''நீங்கள்தாம் தியாகம் செய்வதையே ஒரு வீர விளையாட்டாகக் கருதும் சிலராயிற்றே!'' என்றார் அரசியார்.

''தியாகம் செய்வதற்கும் இப்போது ஒன்றும் வழி தெரியவில்லையே?'' என்று தடுமாறினார், தம்முடைய வெற்றி என்ற கூண்டுக்குள் தாமே அகப்பட்டுக் கொண்ட வெம் புலியான குலோத்துங்கர்.

''நான் பேதை! ஏதாவது கூறி வைத்தால் தங்களுடைய வெஞ்சினத்துக்கு ஆளாக வேண்டிய நிலை ஏற்படக் கூடும். தங்களுடைய வெஞ்சினத்தின் பெரும் பகுதியை முதலில் என்னிடம் தானே திருப்புவீர்கள்?''

குலோத்துங்கர் தமக்குள் நகைத்துக் கொண்டார். உரையாடும் பழக்கத்தை ஒரு கலையாகவே எப்படி அரசி

அறிவிப்பு

ஹார்வி

# டுவின் டஸ்கர்

டிரில், லாங்கிளாத்

ஹார்வி டுவின் டஸ்கர் டிரில்லும் லாங்கிளாத்தும் உங்களுக்கும், உங்கள் வீட்டுத் தேவைகளுக்கும் உகந்தவை. நிஜார்களுக்கு டிரில், ரவிக்கை, பாவாடை, பைஜாமா, விரிப்புகள், தலையணை உறைகளுக்கு லாங்கிளாத். ஹார்வி டிரில்லும் லாங்கிளாத்தும் நீடித்த உழைப்பும் உறுதியும் கொண்டதால், எவ்வளவுதரம் சலவை செய்தாலும் அவைகளின் வழவழப்பான நெசவின் தன்மை கெடுவதில்லை. இவ்வளவு குறைந்த விலையில், இவ்வளவு உயர்ந்த தரத்தை மற்றெந்த துணிகளும் அளிக்க முடியாது.

நீங்கள் மறுபடி டிரில்லும் லாங்கிளாத்தும் வாங்கும் பொழுது டுவின் டஸ்கர் சின்னத்தை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இந்தச் சின்னம் நீங்கள் நம்பும் தரத்திற்கு அத்தாட்சி.

மிக உயர்ந்த ரக துணிகள்

*பகட்டான தோற்றம்

*நீடித்த உழைப்பு

மதுரை மில்ஸ் தயாரிப்பு

உயர்ந்த ரக நூல்களுக்கு பிரக்யாதி பெற்றது.

மதுரை மில்ஸ் கம்பெனி லிட்., மதுரை.

மானேஜிங் ஏஜண்டுகள் : ஏ & எப் ஹார்வி லிமிடெட்.



மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்

B3-MMC-12A TAM

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்



உன்னதமான காஷ்மீர் பொக்கே யின் தரம், ஒரு அழகுசாதன டால்க்... ஒரு குழந்தைக்கான பவுடர் இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் பொக்கே டால்க்கின் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தை நீங்கள் உணரும்பொழுது ஒரு பூச்செண்டிற்குள் இருப்பது போலவே தோன்றும். உடல் முழுவதும் தடவிக் கொண்டு அதன் ஊற்றுப்பெருக் கென எழும் புதிய நறுமணத்தில் திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




# காஷ்மீர் பொக்கே

**டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!**

C.B.6-10.TAM.

யாரால் கற்க முடிந்தது என்ற வியப்பு அவருக்கு. வயது மிகுதியாக மிகுதியாகச் சாகஸமும் மிகுந்துகொண்டுதான் வருகிறது என்று அவர் பெருமைப்பட்டுக் கொண்டார்.

''என்னுடைய வெஞ்சினத்தையெல்லாம் குளிர் தென்றலாக மாற்றக் கூடிய வித்தகி நீ. தாராளமாக இப்போது உனக்குச் சோழ சாம்ராஜ்யத்தின் அமைச்சர் பதவியை அளிக்கிறேன். நீ உன் ஆலோசனைகளைக் கூறலாம். இன்னும் அரை நாழிகைப் பொழுதுக்கு நீதான் அமைச்சர்!'' குலோத்துங்கரின் மனம் மிகவும் இலேசாக மாறி உற்சாகத்துடன் அப்போது மிதந்து கொண்டிருந்தது.

அரசியார் மெல்ல அவரை நெருங்கிச் சென்றார். அவருடைய செவிகளில் மட்டும் கேட்கும்படியாக எதையோ கூறினார். பிறகு அவர் முக மாறுதல்களைப் புன்னகை பூத்தவாறே உற்று நோக்கினார்.

''வெற்றியையே தியாகம் செய்வது என்பது தங்களுக்கு விநோதமாகத் தோன்றலாம். தியாக விநோதர் என்பதால் நானும் கூறத் துணிந்தேன்.''

''வெற்றியின் தியாகமல்ல இது; வெற்றியின் தோல்வி!''

''தங்களுக்கு அப்படித் தோன்றினால் தயவுசெய்து என்னை மன்னித்தருளுங்கள். பெரிய பெரிய விஷயங்களை நினைத்துப் பார்ப்பதற்கே எனக்குத் தகுதி போதாது.''

அரசியாரை அருகில் அழைத்து நெஞ்சாரத் தழுவிக் கொள்ள வேண்டுமென்று துடித்தது குலோத்துங்க சக்கரவர்த்தியின் மனம்.

''வெற்றியின் தோல்வியைத்தான் நீ இப்படி என்னிடம் தியாகமென்று மாற்றிச் சொல்லியிருக்கிறாய். நான் அதை அந்த உருவத்தில் வெளியுலகத்துக்குச் சொல்ல வேண்டுமென்பது உன் விருப்பம். அகட்டும்! அவ்வாறே செய்வோம். வெற்றி எனக்குக் களைப்பையே தருகிறது. இந்தத் தோல்வி எனக்கு மகிழ்ச்சி தரக் கூடியதுதான்.''

அன்று இரவு அமைதியோடு உறங்கினார் குலோத்துங்கர். நோய் பெரும் பகுதி குறைந்து விட்டது.

மறு நாள் படுக்கையில் கிடந்தவாறே அவர் படைத் தலைவர்கள் கூட்டத்தில் இதைக் கூறினார்:

''இந்த வெற்றியையே தியாகம் செய்து விட்டு நாம் சோழ நாட்டுக்குத் திரும்ப வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. கண்டவர் நடுங்கும் காலன் என்றுதான் என்னை இதுவரையில் பாண்டியர்கள் நினைத்திருப்பார்கள். நான் தியாகவிநோதன் என்பதையும் அவர்கள் இதன் வாயிலாக அறிந்து கொள்ளட்டும்.''

பரபரப்போடு சக்கரவர்த்திகளின் கருத்தறியக் காத்திருந்தார்கள் படைத் தலைவர்கள்.

''குலசேகர பாண்டியர் எங்கிருந்தாலும் அவரை அழைத்து வந்து நாமே நம் கரத்தால் முடிசூடி விட்டுச் செல்ல விரும்புகிறோம் என்று முரசுச் செய்தி பரப்புங்கள். நம்முடைய தியாக விநோதம் இந்தப் பாண்டிய நாடு முழுவதுக்கும் தெரிந்திருக்க வேண்டும். இதைக் கேட்டவுடன் அவர்கள் தங்களது இளவரசனின் பிரிவை மறந்துவிடுவார்கள். நம்முடைய நோக்கமும் நிறைவேறி விட்டதால் மிகுதியை நாம் தியாகம் செய்து விடுவோம்!''

விடைபெற்றுக் கொண்டு சென்ற படைத் தலைவர்கள், ''நம்முடைய சக்கரவர்த்திகளின் தியாகத்தைப்போல் நாம் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை!'' என்று பெருமையோடு கூறிக் கொண்டார்கள். சக்கரவர்த்தியோ தம்மை அரசியார் ஏமாற்றியதையும் தாம் உலகை ஏமாற்றியதையும் எண்ணி நகைத்துக் கொண்டார்.

அவருடைய தியாக விநோதச் செயல் பாண்டிய நாடு எங்கும் பறந்து சென்றது.

### இருபத்தாறும் அத்தியாயம்

## குளிர்சோலைக் கொடுங்குன்றம்

வானத்தில் வண்ணத்திரள் மேகம் செறிந்து வைகைப் புனலின் மேற்பரப்பிலேயே சில காலங்களில் குளிர்சாரலைப் பொழிவதுண்டு. அப்போதெல்லாம், வைகையில் வாழும் கயல் மீன்களின் கூட்டத்துக்கு எல்லையற்ற குதூகலம் பொங்கி எழுவதைக் காணலாம். நீரின் மேற்பரப்புக்கு வந்து அவை கூட்டம் கூட்டமாய் மேலே துள்ளி விளையாடித் திரியும் காட்சி இருக்கிறதே, அது கண் கொள்ளாக் காட்சி. கயல்விழியும் இப்போது அத்தகையதொரு கயல் மீனாகத்தான் மாறியிருந்தாள்.

கண்ணெதிரில் தோன்றி அவளது உள்ளத்தை யெல்லாம் கொள்ளை கொண்டு நின்றது அந்தக் குளிர்

சோலைக் கொடுங் குன்றம். அதன் பேரெழில் வெள்ளத்திலே அவள் சின்னஞ்சிறு பொன் மீனாக உருவெடுத்து நீந்தித் திளைக்கத் தொடங்கிவிட்டாள்.

திரும்பிய திசைகளிலெல்லாம் சரக்கொன்றை பூத்துப் பொன்னருவி போல் பொழிந்து கொண்டிருந்தது. தேன் வண்டுகளின் ரீங்காரத்துக்கிடையில் குயிலோசையின் மோகன ராகம் மயக்கத்தை எழுப்பிச் சுழன்றது. தொலை தூரத்தில் குன்றின் உச்சியில் ஒரு புறம் கோயில் கோபுரம் நிமிர்ந்து நிற்பதைக் கண்ணுற்றாள். 'இறைவனும் அழகு நிறைந்த சூழ்நிலையைத் தேடிப் பிடித்துத்தான், இயற்கையின் எழில் பொங்கும் இடமாகப் பார்த்துத்தான், தனது மங்கை நல்லாளுடன் அங்கு வந்து தனித்திருக்கிறான் போலும்...!'

'திருஞான சம்பந்தர்கூட இந்தக் கொடுங்குன்றத்தையும், இதையடுத்த திருநகரையும், இதில் உறையும் நல்ல மங்கை பாகனையும் பாடியிருக்கிறாரே!' என்று அவள் நினைத்தபோது, அவளையறியாமல் அவள் இதழ்கள் அசைந்தன. தேவாரம் தேன் பெருக்காய்த் தென்றலில் கலந்தது.

"வானில் பொலி வெய்தும்—மழை
மேகம் கிழித் தோடிக்
கூனல் பிறை சேரும்—குளிர்
சாரல் கொடுங் குன்றம்!...

மயில் புல்குதண் பெடையோடுடன்
ஆடும் வளர் சாரல்
குயில் இன்னிசை பாடும்—குளிர்
சோலைக் கொடுங் குன்றம்!"

வெண் பனிச் சாரலுக்குப் பின்னே அந்தப் பொன் மயமான மாலை வேளையில் கீழ்த் திசையில் வானவில் தோன்றியிருந்தது. அதைக் கண்டு பொறுக்காத ஆண் மயிலொன்று தன் தோகையை விரித்தபடி மெய் சிலிர்க்கத் தன் பேடையின் முன்னால் ஆடத் தொடங்கி விட்டது. ஆடற் கலைச் செல்வியின் உள்ளமும் தன் தோகையை விரித்து நடனம் புரிந்தது.

வைகையாற்று வெள்ளத்தில் தான் குதித்து இறந்து போயிருந்தால் இந்தப் பேறு தனக்குக் கிடைத்திருக்குமா என்று அவள் எண்ணிப் பார்த்தாள். பைந்தமிழ்க் குமரன் பிழைத்து எழுந்து விடுவான் என்ற நம்பிக்கையை அவளுக்கு அந்தச் சூழ்நிலை ஒவ்வொரு கணமும் கொடுத்துக் கொண்டிருந்ததால்தான் அவளுக்கு உயிர் வாழ்வதில் ஒரு பிடிப்பும் அக்கறையும் கொள்ள முடிந்தது. மருத்துவருக்கு வேண்டிய மூலிகைகள் யாவும் அங்கு கிடைத்தன. காற்று, கதிரொளி, தேன், தினைமா, திங்களைத் தண்ணீர் எதற்குமே தட்டில்லை.

விழுப்பரையரும் அவர்களுக்கு வேண்டிய உணவு உடை முதலிய பொருள்களை எங்கிருந்தோ கொண்டு வரச் செய்து அங்கு குவித்திருந்தார். அவருடைய செயல்களில் பொதிந்து கிடந்த அன்பை மட்டிலும் அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் எங்கெங்கோ சென்றார்; ஏதேதோ செய்தார்; அவர் எங்கு சென்றாலும் எதைச் செய்தாலும் யாவும் பைந்தமிழ்க் குமரனுக்காகவே இருந்தன.

கண்ணின் கருமணியாக, உயிருக்கு உயிராக, உயிரினும் சிறந்த ஏதோ ஒன்றாக, அந்த இளைஞனை அவர் எதற்காகப் பாதுகாக்க வேண்டும்? கயல்விழிக்கு இது வியப்பாகவே இருந்தது. அவருடைய அன்பினால் தானும் அவரைப் போலவே மாறிவிட்டதை உணர்ந்தாள். அல்லது அந்த இளைஞனிடம் ஏதோ மாய சக்தி இருக்கக் கூடும் என்றும் அவளுக்கு நினைக்கத் தோன்றியது.

"அம்மா, கயல்விழி!" என்று உள்ளிருந்தவாறே குரல் கொடுத்தார் மருத்துவர். துள்ளல் நடையுடன் அவரிடம் சென்றாள்.

மருந்துகள் சித்தமாக இருந்தன. உள்ளே குடிப்பதற்குக் கொடுக்க வேண்டிய கஷாயத்தையும் விழுப்புண்களுக்குப் போட வேண்டிய பச்சிலைக் கூழையும் எடுத்துக் கொண்டாள் கயல்விழி.

"இந்தப் பச்சிலைக் கூழ் உடம்பில் பட்டால் எரியுமா ஐயா?" என்று வெகுளியாய்க் கேட்டாள் கயல்விழி. குளிர்ச்சியாக இருக்க வேண்டும் என்பது அவள் ஆவல்.

மருத்துவர் புன்முறுவல் பூத்துவிட்டு, "வேண்டுமானால் ஒரு துளியை எடுத்து உன் கரத்தின் மேல் தடவிப் பார்!" என்றார் விளையாட்டாக.

கயல்விழி ஒரே ஒரு துளியை எடுத்துத் தன்னுடைய புறக் கையில் மெல்லப் பூசினாள். செந்தணலைக் கொண்டு வந்து வைத்தது போல் அந்த இடம் பற்றி எரிந்தது. தேளால் கொட்டப் பெற்றவள் போல் கரத்தை உதறிக் கொண்டு 'ஆ!' வெனக் கூவினாள். அவள் துடித்த துடிப்பைக் கண்டுவிட்டு மருத்துவரே பதறிப் போனார்.

எங்கோ நினைவாக மண்டபத்துக் கூரையைப் பார்த்தபடி படுத்திருந்தான் பைந்தமிழ்க் குமரன். அவனால் எழுந்து நடமாட முடியவில்லையே தவிர,

அவன் சுய உணர்வைப் பெற்று விட்டான். பொழுதில் ஒரு பகுதி உறக்கத்திலும் மறு பகுதி விழிப்பிலும் கழிந்து கொண்டிருந்தது. அவன் விருப்பப்படி ஓலைச் சுவடிகள் சிலவற்றை அவனருகில் கொண்டு வந்து வைத்திருந்தார் விழுப்பரையர். அவன் அவற்றை எடுத்துப் படிக்க முயன்றான். அவனால் படிக்கவும் முடியவில்லை. மருத்துவரும் அவனைத் தடுத்து விட்டார்.

வைத்தியம் தொடங்கியது. மருந்துகளை வைத்து விட்டு, மயில் தோகை விசிறியை எடுத்து மெல்ல விசிறத் தொடங்கினாள் கயல்விழி. இது போல் பணிவிடைகள் செய்யும் பழக்கமெல்லாம் அவளுக்கு முற்றிலும் புதுமையானவை. ஏவலுக்குப் பணிப்பெண்களும் தோழிகளும் இருந்ததால் அவள் தன் மாளிகையில் இளவரசி போலவே வளர்ந்தவள். இப்போதோ ஒவ்வொன்றையும் அவள் செய்து பழகிக் கொள்ள வேண்டியதிருந்தது. இந்த மாற்றத்தை அவள் விரும்பி மேற்கொண்டு விட்டாள்.

வேப்பிலைத் தண்ணீரால் காயங்களைச் சுத்தமாகக் கழுவி, அவற்றின் மேலிருந்த பற்றுத் துணிகளை இழுத்தார் மருத்துவர். அவனுடைய விரிந்து பரந்த மார்பகமெங்கும் ஒரே மலர்க்காடு போல் காட்சியளித்தது. அவ்வளவும் செக்கச் சிவந்த செம்பரத்தம் பூக்கள்; செவ்விரத்த மலர்கள் !

அந்த மலர்களை மொய்க்கும் இரு கருவண்டுகள் எனக் கயல்விழியின் கண்கள் அந்த வீரனின் மார்பகத்தைச் சுற்றி வந்தன. கண்ணீரை அவளால் அடக்க முடியவில்லை. அதைப் பைந்தமிழ்க் குமரனும் கவனித்து விட்டான். 'வீராவேசமான பேச்சும் நடிப்பும் அரங்கத்தில் மட்டிலும்தான் வெளிப்படும் போலிருக்கிறது!' என்று அவன் நினைத்தபோது, ஏளனச் சிரிப்பொன்று அவன் இதழ்களில் மிதந்து நின்றது.

''எதற்காக இப்படி நகைக்கிறீர்கள்? எப்படி உங்களால் நகைக்க முடிகிறது?''

''நகைப்பது குற்றமா? நான் வேறு என்ன செய்ய வேண்டும் என்று நீ சொல்கிறாய்?''

மருத்துவர் நிதானமாக ஒவ்வொரு புண்ணின்மீதும் பச்சிலைக் கூழை வைத்து அதற்கு மேல் புதிய துண்டுத் துணிகளைப் போடத் தொடங்கினார். அவன் துடிதுடித்து அலறப் போவதை எதிர்பார்த்து நடுநடுங்கினாள் கயல்விழி. அவன் வலி தாங்காது கூவப் போகும் காட்சியைக் காணப் பொறுக்காது தன் கண்களைப் பொத்திக்கொண்டாள். ஒவ்வொரு முறையும் மருத்துவர் புண்ணின் மீது மருந்து தடவும்போதும் ஒவ்வொரு கூர் வேலை அவள் நெஞ்சில் பாய்ச்சுவது போலிருந்தது.

—விசிறியை மெல்லக் கீழே வைத்து விட்டு, அங்கிருந்து எழுந்து ஓட முயன்றாள் அவள்.

''கயல் விழி!'' அன்பு பொங்கும் குரலில் அவன் மிகவும் கனிவோடு அவளை அழைத்தான். அவள் திரும்பிப் பார்த்தாள்.

''தயைசெய்து இப்படி அமர்ந்து சிறிது வீசுகிறாயா?''

அணுவளவும் வலியோ வேதனையோ அநுபவிக்காதவன் போல் அவன் புன்முறுவல் செய்து கொண்டிருந்தான். ஏனோ அவன் மீது அவளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. இவ்வளவு பயங்கரமாகக் கூட ஓர் இளைஞன் இருக்கக் கூடும் என்று அவள் கற்பனையும் செய்யவில்லை.

மருத்துவர் தமது பணியை முடித்துக்கொண்டு உள்ளே எழுந்து சென்றார்.

''ஏன் இப்படி வாய் விட்டுத் துன்பத்தை வெளியிடாமல் மறைக்கப் பார்க்கிறீர்கள்?'' என்றாள் அவள்.

''துன்பமா! அது இருந்தாலல்லவோ வெளியிடுவதற்கு?''

''என்னை ஒன்றும் ஏமாற்ற வேண்டாம். வெறுங் கையில் பட்டபோதே இந்த மருந்து நெருப்பாய்ப் பற்றி எரிகிறது....''

''எனக்கோ அது சந்தனக் குழம்பு போல் குளிர்ச்சியாக இருக்கிறது. என்னிடம் அன்பு கொண்ட யாரோ அதன் வெம்மையை யெல்லாம் தனக்கென்று எடுத்துக் கொண்டு விட்டார்கள் போலிருக்கிறது!''

உற்று அவனை வியப்போடு பார்த்தாள் கயல்விழி. அவனும் அந்தக் கண்களின் குளுமையில் தனது உடல்வேதனையைக் குளிர்விக்க முயன்று கொண்டிருந்தான்.

கயல்விழிக்கு ஏனோ இவன் வெறும் புலவனில்லை என்ற ஐயம் உதயமாகி விட்டது. மென்மையான உணர்ச்சிகளும் கலை உள்ளமும் கொண்ட புலவனாக இருந்தால், இவனால் எப்படி அளவுக்கு மீறிய உறுதியுடன் விளங்க முடியும்?

கயல்விழிக்குப் பொறுக்க முடியவில்லை.

''உண்மையைக் கூறுங்கள்; நீங்கள் புலவரா? அல்லது மறவரா?'' என்று கேட்டாள். திடுக்கிட்டான் பைந்தமிழ்க் குமரன். **(தொடரும்)**



சூடாக ஒரு கப் தேயிலை
அருந்தியபின் ஏற்படும்
புது மலர்ச்சியே அலாதிதான்!

நீங்களே ஒப்புக்கொள்வீர்கள்

# டாடா-ஃபின்லே
## தேயிலை

ஈடில்லாத தேயிலை!



## புத்தம் புது தேயிலை
•
## சுவையுள்ள தேயிலை
•
## சிறந்த தேயிலை

பின்வரும் ஐந்து ரகங்களில் கிடைக்கிறது:
ப்ரெஸ்டிஜ் டார்ஜிலிங்-டின்னில்
லலித் பொன்னிற அட்டைப் பெட்டியில்
மிலாப் வெள்ளிநிற அட்டைப் பெட்டியில்
பஹாதுர் ஆரஞ்சு நிற அட்டைப் பெட்டியில்
ஷான் நீலநிற அட்டைப்பெட்டியில்



**டாடா-ஃபின்லே** தேயிலை பருகுவீர்;
உன்னதத் தேயிலை இன்பம் எய்துவீர்!

# இளைய பாரதத்தினர்

சமீபத்தில் சென்னை சர்க்கார் தொழில் மந்திரி திரு ஆர். வெங்கடராமன் இன்ஜினியரிங் கல்லூரியில் சேர விரும்பும் மாணவர்களில் பலர் நிறைய மார்க்குகள் வாங்கியும் அவர்களைச் சேர்த்துக் கொள்ள முடியாததற்கான காரணத்தை விளக்கினார். அந்த மாணவர்கள் குறைந்த அளவு எடையான தொண்ணூறு பவுண்டுக்கும் குறைவான எடை உள்ளவர்களாக இருந்ததால் அவர்களால் இன்ஜினியரிங் படிப்பில் ஏற்படும் சிரமங்களைத் தாங்க இயலாது என்று நிறுத்தி விட்டதாக இயம்பினார். 'சுவரை வைத்துத் தான் சித்திரம் எழுத வேண்டும்' என்பது முதுமொழி. அப்படிப்பட்ட மாணவர்கள் தங்கள் உடலை வளர்த்துக்கொள்ள வேண்டுமானால் உடற்பயிற்சி நிலையங்கள் தேவையல்லவா? பள்ளியில் பயிலும்போதே இப்படி உடல் பயிற்சி நிலையங்களில் தங்கள் உடல் வலிமையைப் பெருக்கிக் கொண்டு வந்திருந்தால் கிடைக்கவிருந்த அரிய இன்ஜினியரிங் கல்லூரி அட்மிஷனை அவர்கள் இழக்க வேண்டியிருந்திராதே?

மாயவரத்தில் இப்படி உடல் பயிற்சி நிலையமொன்றை இளைய பாரதத்தினர் 'பஸ்கி' கணேசன் இலவசமாகவே பல வருஷங்களாக நடத்தி வருகிறார் என்று கேள்விப்பட்டதும் மகிழ்ச்சியாக இருந்தது. இவர் இலவசமாக இந்த உடற்பயிற்சி நிலையத்தை நடத்துவதால், தம் பிழைப்புக்காக மாயூரம் பாங்கியில் குமாஸ்தாவாகப் பணியாற்றுகிறார். அதனால் இவரால் முழு நேரமும் இந்த உடற்பயிற்சி நிலையத்தில் தம் கவனத்தைச் செலுத்த முடியவில்லையாம். இவரது ஆற்றலும், திறமையும் இதனால் வீணாகிப் போய்விடுகின்றனவாம். இந்த உடற்பயிற்சி நிலையம் நடத்துவதற்கு அவருக்கு ஊக்கமும், உற்சாகமும், நிதி வசதியும் கிடைத்தால் வருங்காலச் சிறார்களின் உடல் நலத்தை இவர் நன்கு பேணி வளர்த்து விடுவார்.

''உங்கள் உடற்பயிற்சி நிலையத்தில் நீங்கள் என்னவெல்லாம் கற்றுத் தருகிறீர்கள் ?''

''எங்கள் உடற்பயிற்சி நிலையத்தில் தண்டால் வகைகள், பஸ்கி தினுசுகள், கர்லா கற்றுவதில் விதம் விதமான பயிற்சிகள், சந்தோலா, டம்பல்ஸ், டெவலப்பர் அப்பியாசங்கள், பாரம் தாங்கும் பயிற்சி முறைகள், சிலம்பம், குத்துச் சண்டை கற்றுத் தருகிறோம். இவை தவிர சூரிய நமஸ்காரம், பிராணாயாமம், ஆசன வகைகள், யோகாப்பியாசம் ஆகியவற்றையும் பயிலுவிக்கிறோம்'' என்று கூறினார் இளைஞர் கணேசன்.

''அசைவ உணவு சாப்பிடாமலே உடலை நன்கு வளர்க்க முடியுமா?'' என்று கேட்டேன்.

''என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள் ? என் தந்தை ஹடயோகி ஆர். லக்ஷ்மண சாண்டோவும் நானும் சைவ உணவு அருந்தி வருபவர்கள். முட்டைகூடச் சேர்த்துக் கொள்வதில்லை. நிறையப் பால், பழங்கள், பாதாம்பருப்பு இவைகளை உணவோடு உண்டு ஊட்டம் பெற்று உடற்பயிற்சி பெற்றவர்கள். என் தந்தை லக்ஷ்மண சாண்டோ மாயவரத்திலுள்ள பெரிய கோவிலிலுள்ள மிகப் பெரிய யானையைத் தம் மார்பின் மேல் ஏறி நிற்கச் செய்து தாங்கியிருக்கிறார். நாலு டன் ரோலரைத் தம் மேல் உருளச் செய்து பார்த்திருக்கிறார். நான் ஒன்பது வயதிலேயே ஆறாயிரம் பஸ்கிகள் போட்டுப் பேராசிரியர் கல்கி அவர்களாலேயே தங்கள் பத்திரிகையில் எழுதப்பட்ட பெருமை பெற்றவன் !'' என்று சொல்லி 1942 கல்கி இதழில் வெளிவந்திருந்த பிரதியை எடுத்துக் காட்டினார். இவரது செயல் திறமையை வியந்து பேராசிரியர் கல்கி, சிறுவர் பகுதியில், ''......மாயவரத்தில் பலர் முன்னிலையில் இரண்டே மணி நாற்பது நிமிஷங்களில் ஆறாயிரம் பஸ்கிகள் போட்டு விட்டானாம். இவனுடைய தகப்பனார் ஆர். லக்ஷ்மணய்யர் தேகாப்பியாச நிபுணராகையால் பிள்ளையை இம்மாதிரி பழக்கப்படுத்தி யிருக்கிறார். நீங்கள் எல்லாரும் கணேசனைப் போல் தேகாப்பியாசம் செய்து



வந்தால் சிறந்த பலசாலிகள் ஆகி விடு வீர்கள். அப்புறம் ஜப்பான்காரன் இந்தி யர்களைப் பயமுறுத்த நினைக்க மாட்டான். 'இந்தியா' என்ற பெயரைக் கேட்டாலே பயப்படுவான். இங்கிலீஷ்காரர்களும் இந் தியா தேசத்தை உங்களிடமே கொடுத்து விட்டுப் போய் விடுவார்கள்'' என்று எழுதி யிருந்தார்.

இங்கிலீஷ்காரன் ஓடிப் போய் விடுவான் என்று பேராசிரியர் கல்கி சொன்னது பலித்து விட்டது. நமக்குச் சுதந்திரம் கிடைத்துவிட்டது. ஆனால் நமது இளைஞர்கள் இன்னும் பலம் குன்றிக் கல்லூரிகளில் இடம் பெறுவதையும் இழந்து போய் நிற்கிறார்கள்.

இப்படிப்பட்ட நிலையில் இளைய பாரதத்தினர் பஸ்கி கணேசன் இலவசமாக நடத்தும் உடற்பயிற்சி நிலையம் போன்றவற்றுக்கு ஆதரவு கிடைக்க வேண்டியது அவசிய மல்லவா ?

அவரது பெயர் கணேசன் அல்லவா! அந் தப் பெயருக்கேற்பப் பிள்ளையாரைப் போலவே இவருக்குக் கல்யாணமாகவில்லை. நாடகத்தில் நடிக்க ஆர்வம் அதிகம் இவருக்கு.

இளைய பாரதத்தினர் கணேசன் தம் உடற் பயிற்சி நிலையத்தை நன்கு விஸ்தரித்து அத னால் பல இளைஞர்களுக்குச் சேவை செய்யத் துடியாய்த் துடிக்கிறார். அவர் ஆசை நிறை வேறும் நாள் என்றாளோ ? — குண்டுமணி


















அவமானமடைந்து ஓட்டமெடுத்த வீரசிம்மன் தன் மறைவிடத்துக்குத் திரும்பிய போது...

அந்தப் பொடியன் நம்மை எப்படி ஏமாற்றி விட்டான்? என்னால் இதைத் தாங்கவே முடியவில்லை....



அரிசி மாவைப் பூசிக் கொண்டு அவர்கள் பிசாசுகள் போலப் பயமுறுத்த வருகிறார்கள் என்று அறிந்து அதை உங்களிடம் சொல்ல வருவதற்குள் காரியம் மிஞ்சி விட்டது..

# ஆளப்பிறந்தவன்

6

கதை: ராஜி

சித்திரம்: விஜு

போனது போகட்டும். இன்னும் ஒரு வாரத்தில் அந்த ஜயசிம்மனுக்கு மகுடாபிஷேகம். அதற்காகத் தயாரித்துள்ள மணிமுடியை அபகரித்துக் கொண்டு வந்து விடு. முடிசூட்டு விழாவில் திருமுடி திருட்டுப் போனது தாங்க முடியாத அவமானம்.



நம்மை அவமானப் படுத்தியதற்கு அவனைப் பழி வாங்குவேன். எப்படியும் முடியோடு வருகிறேன்.

இதே சமயம் அரண்மனையில் ஜயசிம்மனிடம் பிரபாகரன்:



இந்தக் கிரீடத்தை அணிந்து கொண்டு பாருங்கள் இளவரசே...!

சரியாகவே இருக்கிறது ஆனால் ரொம்பக் கனமாக அல்லவா உள்ளது!

ராஜ்யபாரம் என்று கூறுவதில்லையா? இதை நீங்கள் எப்போதும் அணிந்திருக்க வேண்டாம். தர்பாரில் இருக்கும் போது மட்டும் வைத்துக் கொண்டால் போதும்...



அது போகட்டும். இன்று என் நண்பர்கள் எல்லோரையும் இங்கு விருந்துக்கு அழைத்திருக்கிறேன்... ஏன் உன் முகம் ஒரு மாதிரியாகப் போகிறது..?











கிராமத்துச் சிறுவர்களுடன் குப்பனும் அரண்மனைக்குள் புகுந்து விடுகிறான்.



ஜயசிம்மன் தன் கிராமத்து நண்பர்களுக்கு அரண்மனையைச் சுற்றிக் காட்டி வரும் போது..










அரசே! மணிமுடியை நீங்கள் எங்காவது எடுத்து வைத்திருக்கிறீர்களா? நான் வைத்த இடத்தில் அதைக் காணவில்லையே?
காணவில்லையா?
ஆமாம். இப்படி ஏதாவது விபரீதம் நிகழுமென்று பயந்துதான் நான் அதைப் பத்திரமான இடத்தில் வைக்க விரும்பினேன்...


மணிமுடியை
இந்த அரண்மனையை விட்டு எங்கும் போக விடமாட்டேன். நீ கவலைப்படாமல் போகலாம்.


வயிறு நிரம்பச் சாப்பிட்டிருக்கிறோம். அது ஜீரணமாக அரண்மனைக்குள்ளேயே ஒளிந்து பிடித்து விளையாடலாமா!
பேஷான யோசனை! அப்படியே விளையாடலாம்.


சிறுவர்கள் அரண்மனையின் பல்வேறு இடங்களில் போய்ப் பதுங்கிக் கொண்டனர்-ஜெயசிம்மனும்தான்! அப்போது,
சே. சே! என்ன பயம்? இவை எல்லாம் இரும்புக் கவசம் அணிந்த பொம்மைகள் தானே..!


இந்த ஜன்னல் வழியாக ஏறிக் குதித்து வெளியே சென்று விட வேண்டும்..


ஐ..யையோ! இது யார்! என்னை இப்படி..? நான்..திருட வில்லை...ஐயோ...அம்மா..!

தொடரும்

## உண்மைக் கதை

# ஆறாவது அறிவு

திடீரென்று நான் விழித்துக் கொண்டேன். ஒருவித பயத்துடன் விழிகளை நாலா புறமும் சுழல விட்டேன். நான் எங்கிருக்கிறேன்? ஓர் ஆஸ்பத்திரியில்தான். அது தெளிவாகப் புரிந்தது. எழுந்து உட்கார முயன்றேன்; தலையில் ஏதோ 'விண் விண்' என்று தெறித்தது. வேதனையைப் பொறுக்க முடியாமல், ''நர்ஸ்! நர்ஸ்!'' என்று கூவி அழைத்தேன். அவள் அருகில் வந்ததும் தலையை ரொம்பவும் வலிப்பதாகக் கூறினேன்.



''வலிக்காமல் என்ன செய்யும்? முப்பதடி உயரத்திலிருந்து நீ விழுந்தாயாமே? பிழைத்திருப்பதே புனர்ஜென்மம்தானே!'' என்று கூறினாள் அவள்.

சட்டென்று எனக்கு எல்லாம் ஞாபகம் வந்தது. நான் ஒரு கட்டடத்தின் ஜன்னல் கதவுகளுக்கு வர்ணம் பூசிக் கொண்டிருக்கிறேன். இரண்டு ஜன்னல்களுக்கு மத்தியில் ஏணியைச் சுவரில் சாத்தி வைத்து விட்டு அதன் மீது ஏறி நின்றபடி பெயிண்ட் அடிக்கிறேன். இதனால் ஏணியை நகர்த்தாமலேயே ஒரே இடத்தில் நின்றபடி இரண்டு ஜன்னல்களுக்கும் வர்ணம் தீட்டி விடலாம் என்பது என் எண்ணம். ஆனால் என் அநுமானத்தில் நான் தவறு செய்துவிட்டது விரைவிலேயே நிரூபணமாகிறது. இடது பக்கமுள்ள ஜன்னலை நோக்கி என் கரமும் உடலும் நீளுகின்றன. அளவுக்கு அதிகமாகவே நீண்டு விடுகின்றன. நான் நிலை தடுமாறிக் கீழே விழுகிறேன். தார் ரோட்டை என் தலை தாக்குவதற்குமுன்னால் அந்த நாலைந்து வினாடிகளுக்குள் என் வாழ்க்கையே என் முன்னால் திரைப்படம் போல் தோன்றுகிறது. அத்துடன் விவரிக்க இயலாத பீதியும் என்னை ஆட்கொள்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக ஓர் எண்ணம்: ''நான் இறந்துவிடக் கூடாது...!''

நான் ஆஸ்பத்திரியில் விழித்தெழுந்தது, 1943ம் வருஷம் ஜூன் மாதத்தில் ஒரு நாள். அப்போது ஹாலந்து தேசம், ஜெர்மானியரின் ஆக்கிரமிப்புக்கு உட்பட்டிருந்தது. என்னைப் பரிசோதித்த டாக்டர் நான் உயிர் வாழ்வதே ஓர் அற்புதம்தான் என்றார். நர்ஸ் குறிப்பிட்டது போல் அன்றைய தினத்தை நான் மறுபிறவி எடுத்த நாளாகவே கருத விரும்புகிறேன். ஏனெனில், மண்டை ஓடு பிளந்ததுடன் தோளிலும் எலும்பு முறிவு ஏற்பட்டிருந்த என்னிடம் இன்னமும் ஆண்டவன் உயிரை விட்டு வைத்திருந்ததுடன் அன்று முதல் வேறு ஓர் அதிசயமான சக்தியையும் எனக்குக் கொடுத்து அருளியிருந்தார்.

இதைப் பக்கத்துக் கட்டிலில் படுத்திருந்த நோயாளியைப் பார்த்தபோதுதான் நான் முதன் முதலில் உணர்ந்தேன். அவனை நான் இதற்கு முன்னால் சந்தித்ததே கிடையாது. நாங்கள் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்ளவும் இல்லை. இருந்தாலும் அவனைப் பற்றிப் பல விஷயங்கள் எனக்குத் தெரிந்திருந்தன!

''நீ ரொம்பக் கெட்டவன!'' என்னையும் அறியாமல் குபுக்கென்று வார்த்தைகள் வெளி வந்து விட்டன.

அவன் துணுக்குற்று என்னை நிமிர்ந்து பார்த்தான்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?'' என்று கேட்டான். நான் ஏதோ வேடிக்கை செய்வதாக அவன் நினைத்திருக்க வேண்டும்.

''உன் அப்பா இறந்தபோது உனக்குத் தம் அன்புப் பரிசாகத் தமது தங்கக் கடிகாரத்தை விட்டுச் சென்றிருந்தார். அவர் இறந்து சில தினங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் நீ அந்தக் கடிகாரத்தை விற்றுப் பணம் பண்ணி விட்டாய்!'' என்றேன் நான்.

அவன் வாயடைத்துப் போனவனாக என்னைப் பார்த்து, ''அது உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டான்.

'அது எனக்கு எப்படித் தெரிந்தது?' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். அவனைப் போலவே நானும் வியப்பிலாழ்ந்து போய்த் திகைத்தேன்!

'ஏதோ குருட்டாம்போக்கில் இவனைப் பற்றிச் சரியாக அளந்து 'கூறிவிட்டேன்போல் இருக்கிறது' என்று எண்ணிக் கொண்டேன். ஆனால் அடுத்தாற்போல் ஒரு நர்ஸ் வந்து என் நாடியைப் பிடித்துப் பார்க்கத் தொடங்கியதும் திடுமென்று என் மனக் கண் முன் அவனைப் பற்றிய பல அந்தரங்க விவரங்களும் தோன்ற ஆரம்பித்தன.

படபடவென்று என் சிந்தைக்கு எட்டியதை யெல்லாம் வார்த்தைகளாய்க் கொட்டித் தீர்த்தேன்.

அந்த நர்ஸ் சில கணங்கள் அப்படியே அசந்து போய் நின்றாள். அதன்பிறகு




பயத்துடன் ஒரே ஓட்டமாக ஓடிச் சென்று விட்டாள்!

**நா**ன் அடிபட்டுக் கொண்டு நாலைந்து தினங்கள் ஆகிவிட்டன. அந்த ஆஸ்பத்திரியில் நோயாளியாகப் படுத்திருந்த ஒருவன் குணமடைந்து வீடு திரும்பவிருந்தான். எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்ட அவன் என் கரத்தையும் குலுக்கிப் "போய் வருகிறேன்" என்றான்.

அவன் கரத்தைப் பற்றிய எனக்குப் பிடியைத் தளர்த்தவே மனம் வரவில்லை. ஏனெனில், அவன் கரத்திலிருந்து என் தேகத்தில் பாய்ந்த உணர்வு அலைகள் அவனுக்கு நேரப் போகிற விபத்தை எனக்கு அறிவித்தன. அவன் நேச நாடுகள் சார்பில் வேலை செய்யும் ஓர் ஐந்தாம் படையினன். இன்னும் சில தினங்களில் அவன் ஜெர்மானியரால் 'காலவர் வீதியில்' சுட்டுக் கொல்லப்படுவான்!

தன் கரத்தை விடுவித்துக் கொண்டு அவன் திரும்பி நடந்தான். "நர்ஸ்! நர்ஸ்! அவனைப் போக விடாதே! அவன் பிரிட்டிஷாரின் ஒற்றன்! அவனை ஜெர்மானிய சிப்பாய்கள் சுட்டுக்கொல்லப் போகிறார்கள்!" என்று கத்தினேன் நான்.

என் கூச்சலைக் கேட்டுவிட்டு அங்கு ஒரு டாக்டர் வந்தார். "பீட்டர்! நீ கொஞ்சம் ஓய்வாக இருக்க வேண்டும். உன் மண்டை ஓடு 'பிராக்சர்' ஆகியிருப்பதை நீ மறக்கக் கூடாது. அலட்டிக் கொண்டால் விபரீதமாக முடியும்" என்றார் அந்த டாக்டர்.

அவர் கூறியதற்கு ஏற்ப உணர்ச்சி வசப்பட்டுக் கத்திய எனக்குக் கூடவே களைப்பும் மிகுதியாகத்தான் இருந்தது. "அவனைப் போக விடாதீர்கள்" என்று திரும்பத் திரும்ப முணுமுணுத்தபடியே கண்ணயர்ந்து விட்டேன்.

ஹாலந்து தேசத்தில் அன்றைய ஜனத் தொகையில் எண்பது சத விகிதத்துக்கும்

மேலானவர்கள் பிரிட்டிஷ் அனுதாபிகளாகவோ உளவாளிகளாகவோதான் இருந்தார்கள். ஆகவே அந்தப் பிரிட்டிஷ் ஒற்றன் கட்டுக் கொல்லப்பட்ட செய்தி வெளியானவுடன் அவ்வாறு நடக்கும் என்று முன் கூட்டியே நான் அறிவித்த விவரமும் வெகு சீக்கிரத்தில் பரவி விட்டது. ஐந்தாம்படையினர் என் மீது சீற்றம் கொண்டனர். நான் துரோகியாக மாறி விட்டதாகக் கருதினர். ஜெர்மானியர் பக்கமாகச் சாய்ந்து அவர்களுடன் அந்தரங்கத் தொடர்பு கொண்டிருந்த காரணத்தால்தான் எனக்கு அந்தப் பிரிட்டிஷ் ஒற்றன் குறிப்பிட்ட இடத்தில் கட்டுக் கொல்லப்படுவான் என்ற விவரமும் முன்கூட்டியே தெரிந்திருந்தது என்ற முடிவுக்கு அவர்கள் வந்து விட்டனர்.

நான் முன்பின் பார்த்தறியாத ஒருவனை ஐந்தாம்படையினர் என்னிடம் அனுப்பிவைத்தார்கள். அவன் என்னைச் சில கேள்விகள் கேட்டான்; பிறகு குற்றம் சாட்டினான்.

''நானும் ஐந்தாம் படையைச் சேர்ந்தவன்தான். மூன்று வருஷங்கள் என் தாய் நாட்டுக்காக — ஹாலந்துக்காக உண்மையுடன் உழைத்திருக்கிறேன். ஜெர்மானியருக்குத் தலைவலி தரும் தீரச் செயல்கள் பலவற்றில் ஈடுபட்டிருக்கிறேன்'' என்றெல்லாம் எனக்கு நானே வக்கீலாக மாறி வாதிட்டேன். என் வாதங்கள் எடுபடவில்லை. அவன் என்னை நம்பவில்லை. ''முன்பு நீ எத்தகையவனாக இருந்திருந்தால்தான் என்ன? வறுமை, பசி, பிணி ஆகியவற்றுடன் போராடும் மனிதர்கள் எத்தனை நாட்களுக்கு நாட்டு விசுவாசத்துடன் விளங்குவார்கள்? அவர்கள் மனம் மாறலாமல்லவா?'' என்று கேட்டான்.

பசிக் கொடுமையால் உந்தப்பட்டு நான் எதிர்ப் பக்கம் சேர்ந்தாலும் மரணவாயிலில் நிற்கும் ஒருவனிடம் என்னால் பச்சாத்தாபம் காட்டாமல் இருக்க முடியவில்லையாம்; அதனால் அவனைப் போக விடாமல் தடுக்க நினைத்தேனாம்! என்னை உயிர் வாழ விடுவதே பேராபத்தாம்!

தீர்ப்பு வழங்கிய அவனே தண்டனையை நிறைவேற்றவும் ஆரம்பித்து விட்டான்.

அவன் கூட்டாளிகளான ஒரு டாக்டரும் நர்ஸும் என் இரு பக்கத்திலும் நின்று என் இரு கரங்களையும் பிடித்துக்கொள்ள அவன் பக்கத்துக் கட்டிலிலிருந்து ஒரு தலையணையை எடுத்து என் முகத்தில் வைத்து அழுத்தினான்.

என்னால் சத்தம் போட முடியவில்லை; மூச்சு முட்டியது; சிந்தனை இருண்டது. மிகுந்த பிரயாசைப்பட்டு என் குரலை உயர்த்தி சில வார்த்தைகளைச் சொன்னேன்.

''என்னைக் கொல்வதை உன் கடமை என்று நினைக்கிறாய்; ஆனால் இந்தச் செயலை நீ மனப்பூர்வமாக வெறுக்கிறாய்; சிறிதும் இஷ்டமில்லாமலே நீ உன் கடமை என்று கருதுவதால் என்னைக் கொலை செய்ய முற்பட்டிருக்கிறாய்! மனித உயிரைப் பறிப்பது உனக்குச் சிறிதும் பிடிக்காத காரியம்!''

தலையணை மீது அழுந்திய கரங்கள் தளர்ந்தன. ''என் மனத்தில் தோன்றிய எண்ணங்களை உடனுக்குடன் அப்படி அப்படியே எவ்வாறு கூறினாய்?'' என்று கேட்டான் பிரமித்து நின்ற அந்த ஐந்தாம் படையினன்.

அதன் பிறகு என்னையும் அதிசயிக்கத்தக்க அளவுக்கு வளர்ச்சி பெற்றிருந்த என் ஆறாவது அறிவையும் முழுமையாக நம்ப அவன் தயங்கவில்லை. அவன் மட்டுமின்றி அவன் சகாக்களில் பலரும் மீண்டும் என்னை அவர்களில் ஒருவனாகவே விரைவில் ஏற்றுக்கொண்டு விட்டனர். நானும் விரும்பிச் சேர்ந்தேன்.

இந்த ஆறாவது அறிவு எனக்குப் பலவிதங்களில் துன்பத்தையும் அளித்தது. என் நண்பர்கள், உறவினர்கள் பலரது மனத்தில் இருப்பதைப் படித்தறிந்த போது அவர்கள் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசியவர்கள் என்பது புரிந்தது. திடீரென்று எனக்கு நண்பர்களே இல்லாதது போலவும் நான் இந்தப் பரந்த உலகில் தன்னந் தனியனாகி விட்டிருப்பது போலவும் தோன்றியது.

எங்கள் குடும்பத்துக்கு மதம் என்பது ஏதும் கிடையாது. நான் அறிந்த மட்டிலும் அவர்களில் யாரும் கோவிலுக்குப் போனதுமில்லை. ஆனால் இப்போது எனக்கு ஆண்டவன் என்றொருவன் இருப்பதை நம்பினால்தான் வாழ்க்கையை எதிர்நோக்க முடியும் என்று பட்டது. நான் ஒரு பைபிளை வாங்கி ஆர்வத்துடன் படித்தேன். இந்த ஆறாவது அறிவை எனக்குக் கொடுத்தவர் ஆண்டவன்தான் என்பது என்னுள் உறுதிப்பட்டது. இந்தச் சக்தியை நல்ல காரியங்களுக்கு, மக்களின் துயர் தீர்க்க மட்டுமே பயன்படுத்துவது என்றும் தீர்மானித்துக் கொண்டேன்.

என் நண்பன் யாப், ஜெர்மானியரால் ஒரு ராணுவ முகாமில் சிறை வைக்கப்பட்டிருந்தான். யாப்பும் என்னைப் போலவே ஓர் ஐந்தாம் படையினன்தான். துரதிர்ஷ்டவசமாக ஜெர்மானிய ராணுவப் போலீஸாரிடம் அகப்பட்டுக் கொண்டான். அவனைச் சீக்கிரமே ஜெர்மனிக்கு அழைத்துச் செல்லப் போகிறார்கள் என்று கேள்விப்பட்டதும் அவன் மனைவி என்னிடம் வந்து அழுதாள். ''ஜெர்மனியில் அவரை அடிமையாகத்தான் நடத்துவார்கள். பீட்டர்! நீங்கள் அவருடைய நண்பரல்லவா? அவரை எப்படியாவது விடுவிக்கக் கூடாதா?'' என்று மன்றாடினாள்.

நானும் என் ஐந்தாம்படைத் தோழர்களும் கலந்து ஆலோசித்தோம். ஒரு ஜெர்மானியத் தளபதிபோல் நான் வேஷம் போட்டுக்கொள்வது என்றும், யாப்பை வேறு ஒரு ராணுவ முகாமுக்கு மாற்றி விட்டதாக ஓர் உத்தரவை நாங்களே தயாரிப்பது என்றும் தீர்மானித்தோம்.

திட்டப்படியே எல்லாம் நடந்தன. எனக்கு ஜெர்மன் மொழி வெகு நன்றாகப் பேச வரும். சிறைச்சாலைத் தலைமை அதிகாரி எங்களுடைய ஐந்தாம்படைக் காரியாலயத்தில் உருவான 'மேனிடத்து' உத்தரவைப் படித்துப் பார்த்து விட்டு என்னுடன் இரண்டு அதிகாரிகளை அனுப்பி வைத்தார், யாப் தங்கியிருக்கும் இடத்தைக் காட்ட.

யாப் வேறு சில கைதிகளுடன் அங்கே சீட்டாடிக் கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும் கைதிகள் யாவரும் எழுந்து நின்றனர். யாப் என்னை நோக்கினான். அதே

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரீட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✓ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✓ சொத்தையைத் தடுக்கிறது
- ✓ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் பற்பொடி மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி






## பாமாலிவ் பெர்ப்யூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...

உங்கள் கேசத்திற்கு போஷாக்கு அளிக்கிறது. பாமாலிவ் உபயோகிப்பதால் நீண்ட, செழிப்பான கேசம் இயற்கையாக வளருகிறது. ரோஜா, லவண்டர் அல்லது மல்லிகை—இம்மூன்று வசீகரிக்கும் சுகந்தங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளுங்கள்.




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...

உயர்தரமான தேங்காய் எண்ணெய்யுடன் தனிப்பட்டு தயாரிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற கலவை. இது அழுக்கு நீக்கம் செய்யும் ஷாம்பு என்பதுடன், ஒரு கூந்தல் அழகு சாதனமும் ஆகும். பாமாலிவ்வின் செழிப்பான நுரை கூந்தலுக்கு ஊட்டத்தைக் கொடுப்பதுடன் உங்கள் தலையையும் கூந்தலையும் சுலபமாக்கி பரிமள புத்துயிரூட்டுவதனால், புதிய ஆரோக்கியமான கேச வளர்ச்சி ஏற்படுகிறது.

**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**

வினாடியில் என் திட்டமெல்லாம் வீணாகப் போவதை நான் புரிந்து கொண்டேன். யாப் ஜெர்மானிய உடையில் இருந்த என்னை அடையாளம் கண்டு கொண்டு விட்டான். ஆனால் அவன் மனம் குழப்பமடைந்து, என்னைத் தேசத்துரோகி என்றே எண்ணுகிறது. அடுத்த வினாடி அவன் என்னை அருகிலிருக்கும் ஜெர்மானிய ராணுவ வீரர்களிடம் காட்டிக் கொடுக்கப் போகிறான்.

'அடப்பாவி! உன்னை எங்களில் ஒருவன் என்று முழு மனத்துடன் நம்பினேனேயடா! ஏமாற்றி விட்டாயே! தேசத் துரோகி!' என்று உளறி வைக்கப் போகிறான். அப்போது எனக்கு இரு பக்கங்களிலும் இருக்கும் இந்த ஜெர்மானியர் நான் வேஷதாரி என்பதைப் புரிந்து கொண்டு விடுவார்கள்!

என் ஆறுவது அறிவு இவ்வாறு எச்சரித்ததும் என் மூளையும் துரிதமாகச் செயல்பட்டது. யாப்பை நான் வாய் திறக்க விடவில்லை. அவனை இழுத்துத் தரையில் உருட்டித் தள்ளி நாலு உதை விட்டேன். ''திருட்டு நாயே! பேசாதே! வாயைத் திறக்காதே! திறந்தால் உதைத்துக் கொன்று விடுவேன்'' என்று இரைந்தபடியே மேலும் இரண்டு உதை கொடுத்தேன்!

யாப் அதிர்ச்சி அடைந்ததாலோ வலியைப் பொறுக்க முடியாததாலோ வாளா இருந்துவிட்டான். ஜெர்மானிய வீரர்கள் கூட அவனுக்காகப் பரிதாபப்பட்டார்கள். ''இந்த வஞ்சக ஒற்றனுக்காகவா பரிந்து பேசுகிறீர்கள்?'' என்று அவர்களிடமும் கோபத்துடன் கூச்சலிட்டேன்.

கணப்பொழுதில் சிந்தித்து வசனம் எழுதி அரங்கேற்றப்பட்ட என் நாடகம் அபார வெற்றியைக் கண்டது.

பயங்கரமான ஒற்றனை விசாரணைக்காகத் தலைமைச் சிறைச்சாலைக்கு அழைத்துப் போகும் மேலதிகாரியான என்னிடம்

# திரைத் துணுக்குகள்

## ஏட்டிக்குப் போட்டி

படத் தலைப்புக்கள் பலவற்றை இங்கே வரிசையாகக் கொடுத்திருக்கிறேன். இவற்றுக்கு நேர் எதிரான பொருள் கொண்ட திரைப் படங்களின் பெயர்களை உங்களால் கூற முடியுமா ?

1. பணக்காரி. 2. பணம் படுத்தும்பாடு. 3. கல்யாணம் பண்ணிப் பார். 4. மணாளனே மங்கையின் பாக்கியம். 5. மன்னாதி மன்னன். 6. ராஜா ராணி. 7. மணமகள்.

விடைகள் :

1. பிச்சைக்காரி. 2. ஏழை படும் பாடு. 3. கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி. 4. மனைவியே மனித குல மாணிக்கம். 5. நாடோடி மன்னன். 6. நானே ராஜா. 7. மாப்பிள்ளை.

— ஏ. சீனிவாசன்

---

## புள்ளி விவரம்

லக்நோ சர்வகலாசாலையைச் சேர்ந்த புரொபஸர் அஸித் பரன்போஸ் அறுபது ஹிந்திப் படங்களை ஆராய்ந்து ஒரு புள்ளி விவரக் கணக்கெடுத்தார். முடிவுகள்:

1. பெரும்பாலான படங்கள் மத்தியதர, உயர்தரக் குடும்பங்களைச் சேர்ந்த கல்யாணமாகாத படித்த பையன்களைப் பற்றியவை. 2. பாதிப் படங்களுக்கு மேல் வேலை வெட்டி எதுவும் இல்லாதவனையே கதாநாயகனாய்க் கொண்டிருந்தன. 3. பெரும்பாலான படங்களில் வில்லனும், சரிபாதிப் படங்களில் வில்லியும் தோன்றினர். 4. சராசரியில் ஒரு படத்தில் 7.7 பாடல்கள் இருந்தன. 5. 70 சத விகிதம் படங்களில் கதாநாயகன் பாடினான்; 23.3 சதவிகிதம் படங்களில் கதாநாயகி பாடினாள், ஆனால் ஆடவில்லை; 70 சதவிகிதம் படங்களில் அவள் ஆடிப்பாடினாள்!

## மகத்தான சாதனை

எழிலரசி எலிஸபெத் டெய்லர் நடித்த கிளியோபாட்ராவை எல்லாரும் ஆவலுடன் பார்த்துக் கொண்டிருக்கும் அல்லது ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் இத்தருணத்தில் அவர் நடித்தபழையபடம் ஒன்றை (எலிபெண்ட் வாக்) சென்னை மினர்வா தியேட்டரில் திரையிட்டிருக்கிறார்கள்.

கானகத்தை அழித்துத் தேயிலைத் தோட்டத்தை அமைத்த ஒருவர் அதன் மையத்தில் ஒரு மாளிகையையும் கட்டுகிறார். அப்பிரதேசத்தின் வழியாக யானைகள் நீர் அருந்த முன்பு சென்று கொண்டிருந்த காரணத்தால் அம்மாளிகைக்கு 'எலிபெண்ட் வாக்' என்று பெயரும் சூட்டுகிறார். இம்மாளிகையில் வசிப்போரைப் பற்றிய கதையை இலங்கையிலேயே படமாக்கியவர்கள் பலே கைகாரர்களாகத்தான் இருக்க வேண்டும். இறுதிக் கட்டத்தில் ஆவேசமாகப் பாய்ந்து வரும் யானைக் கூட்டத்தை அவர்கள் படம் பிடித்தது பெரிய காரியமில்லையாம்; படாதிபதிகளைப் பாடாய்ப்படுத்தி வைக்கும் எலிஸபெத் டெய்லரை எப்படியோ நடிக்க வைத்துக் காமிராவுக்குள் அடக்கி விட்டார்களே; அது தான் மகத்தான சாதனையாம் !



எல்லா ஜெர்மானிய ராணுவத்தினரும் மிகுந்த மரியாதையுடன் நடந்துகொண்டார்கள். மோட்டார் கார் கொடுத்து உதவினார்கள். ஒரு டிரைவரைக் கூட அனுப்பி வைப்பதாகச் சொன்னார்கள். நான் வேண்டாம் என்றேன். ''கைதி தப்பிவிட்டால்?'' என்று சந்தேகத்துடன் கேட்ட அவர்களை என் பார்வையே மிரட்டிப் பின்வாங்கச் செய்து விட்டது!

கைதிகள் முகாமைவிட்டு வெகுதூரம் வந்த பிறகுதான் நான் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டேன். உண்மை நிலை விளங்கியதும் யாப் ''ஆனாலும் என்னை நீ அவ்வளவு வேகமாக உதைத்திருக்க வேண்டாம்'' என்றான் வீங்கிய தாடையைத் தடவிக் கொடுத்தபடியே.

இப்படி எத்தனையோ அதிசயமான நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்கின்றன என் வாழ்விலே. யுத்தமெல்லாம் முடிந்த பிறகு பல்வேறு தேசப் போலீசாருக்குப் பல சிக்கலான வழக்குகளை விடுவிக்க உதவியிருக்கிறேன். மக்களின் மனத்தைப் படிப்பவன் என்ற முறையில் பல பேர் முன்னிலையில் தோன்றி அவர்களையெல்லாம் வியப்பிலாழ்த்தி யிருக்கிறேன். எனக்குக் கிடைக்கும் பணத்தில் பெரும் பகுதியை மாதா கோயில்களுக்கும் வேறு பல தர்ம காரியங்களுக்கும் தந்திருக்கிறேன். என் சக்தியைத் தீய வழிகளில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று ஆசைப்பட்டு அதற்காகப் பெரிய ஐசுவரியத்தை என் காலடியில் சமர்ப்பிக்க வந்தவர்கள் பலர். நல்லவேளையாக அத்தகைய ஆசைகளுக்கு அடிபணியாதிருக்க ஆண்டவன் எனக்குப் பலம் அளித்திருக்கிறார்.

ஒரு முறை ஒரு சிறுவனின் பெற்றோர் அவன் வாரிக் கொண்ட சீப்பிலிருந்து ஒரு முடியை எடுத்துத் தபாலில் அனுப்பி வைத்தனர். பையன் கங்கா நதியில் குளிக்கப் போனவன்தான்; திரும்பி வரவேயில்லை. நதிக் கரையில் அவன் உடைகள் இருந்தனவாம். 'அவன் மூழ்கி இறந்து விட்டானா? அல்லது உயிருடன் இருக்கிறானா?' என்று கேட்டிருந்தனர். என்னைப் பற்றிய செய்தியை இந்தியப் பத்திரிகை ஒன்றில் படித்திருந்த அவன் பெற்றோர்.

அந்தத் தலைமயிரை என் விரல்களால் தொட்டுப் பார்த்ததுமே சிறுவன் உயிரோடிருக்கிறான்; ஒரு சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்து பணியாற்றுகிறான் என்பது நிழல் படம் போல் என் அறிவுக்கு எட்டியது. 'பம்பாயில் அவனைத் தேடுங்கள்' என்று பதில் எழுதினேன். என் ஆறாவது அறிவு எனக்கு உணர்த்தியதுபோலவே சிறுவன் பம்பாயில்தான் அகப்பட்டான்.

குறிப்பிட்ட ஒரு வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் அணிந்திருந்த ஆடைகளையோ அல்லது கையுறை காலணி போன்ற ஏதேனும் ஒரு பொருளையோ ஸ்பரிசித்தாலே எனக்கு அவர்களைப் பற்றிய பல விவரங்களும் மனத்திரையில் பளிச்சிடுகின்றன. அறிமுகமில்லாத ஒருவன் டெலிபோனில் பேசினால் கூடப் போதும்; அந்த டெலிபோன் 'ரிஸீவரை'த் தொட்டுப் பார்க்கையிலேயே எனக்கு அவனைப் பற்றிய பல தகவல்கள் தெளிவாகத் தெரிகின்றன.

எனக்கு ஏற்படும் இந்த உணர்வு அலைகளை நிபுணர்களான பல தேசத்து டாக்டர்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில் ஆராய்ந்து, பார்த்து அதிசயித்திருக்கிறார்கள். விஞ்ஞானப் பரிசோதனைகளுக்கு இன்னும் நிறைய இடம் இருக்கிறது. அது மிக அவசியமும் கூட. இதற்காக நான் எல்லா வகையிலும் விஞ்ஞானிகளுடன் ஒத்துழைக்கக் காத்திருக்கிறேன்.

பீடர் ஹர்காஸின் சுயசரித்திரத்திலிருந்து சில பகுதிகள். Psychic– பிரசுரம், Arthur Barker, லண்டன்.

கோபால் ஒரு சிறு தொழிலதிபர். அவருக்குப் புதிய இயந்திரங்கள் வாங்கப் பணம் தேவை. ஆனல் அவரால் கூடுதல் வட்டியோ, அல்லது தொகைக்கு ஈடான அடமானமோ கொடுக்க இயலாது. அவருக்கு யார் உதவுவார்கள்?

## தி ஸ்டேட் பாங்க் உதவுகிறது

மிகப் பெரிய பாங்க்—ஆனல் ஒரு வாடிக்கைக்காரரும் அதற்கு மிகச் சிறியவரல்ல.



நாடெங்கிலுமுள்ள 1600 அலுவலகங்கள் மூலம் ஸ்டேட் பாங்க் மற்றும் அதன் உப பாங்குகள் கீழ்க்கண்ட பண வசதிகளை சிறு தொழில்களுக்கு அளிக்கின்றன.

மூலப்பொருள்கள் மற்றும் தயாரிக்கப்பட்டுள்ள சாமான்களின் அடமானத்தின்பேரில் முன்பணம்.

எங்கெங்கு பாங்க் தன்வசம் அடமானப் பொருள்களை வைத்திருக்கமுடியாதோ அங்கு-கடன் வாங்குபவர்கள் தடையின்றி மூலப்பொருள்களை உபயோகிக்க வசதியுடன் தொழிற்சாலைகளுக்கென முன்பணம்.

எங்கெங்கு அடமானங்களைப் பெறமுடியாதோ அங்கு அடமானமின்றிக் கடன் வசதி.

தொழிற்சாலையைப் புதுப்பிக்கவும், விரிவாக்கவுமென நடுத்தரக்காலக் கடன்கள்,

இயந்திரங்கள் வாங்குவதற்கெனத் தவணைக் கடன்கள்,

வட்டி மிகக் குறைவு– 6 சத விகிதம்தான். பிரத்தியேகமான சந்தர்ப்பங்களில் கூடிய பட்சம் 7 சத விகிதம்- இதர செலவுகள் உட்பட.

## தி ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

சிறு தொழிலுக்குப் பெரும் உதவி






# பாமினிப் பாவை



விஜயநகரப் பேரரசின் மகோன்னதமான பொற்காலத்தைச் சித்திரிக்கும் சரித்திர நவீனம்





2-4-1964 **கல்கி** ஆண்டு மலரில் ஆரம்பமாகிறது

உங்கள் ஷர்ட்டுகள்

## டினோபால் தரும் அதிக வெளுப்பினால் பொலிவுடன் விளங்குகின்றன






கண்ணைப்பறிக்கும் வெளுப்பு, கவர்ச்சிதரும் பளபளப்பு! உங்கள் வெள்ளைத்துணிகளின் சலவைக்கு "டினோபால்" உபயோகித்து அதிசயமான மாறுதலைக் காணுங்கள்! ஷர்ட்டுகள், நிஜார்கள், சோளிகள். குழந்தைகளின் ஆடைகள், படுக்கை விரிப்புகள் போன்ற எல்லா வெள்ளைத் துணிகளின் சலவையும் டினோபால் தரும் அதிக வெளுப்பினால் புதுமைப் பொலிவையும், பளபளப்பையும் பெறுகின்றன.

புதிய பில்ஃபர்-ப்ரூஃப் மூடியுள்ள டினோபால் இன்றே வாங்குங்கள்! ஒரு வாளித் தண்ணீருக்கு ½ தேக்கரண்டி மட்டுமே போதும்.

**வெள்ளைத் துணிகளை மிக வெண்மையாக்க ஒரு சிறிதளவு டினோபால் போதுமானது**




டினோபால் என்ற பெயர் ஜே. ஆர். கெய்கீ, எஸ். ஏ. பால், ஸ்விட்ஸர்லாந்து, ஸ்தாபனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும்.

இந்தியாவில் தயாரிப்பவர்கள்: சுஹ்ரித் கெய்கீ லிட்., வடிவாடி, பரோடா. விற்பனை நிலையம்: எக்ஸ்பிரஸ் பில்டிங், சர்ச்கேட், பம்பாய்-1 பி. ஆர்.

Shilpi SGT 236 Tam

# அன்றும் இன்றும் — — —

ராமேஷ்வர்தாஸ் பிர்லா

[பிர்லா குடும்பத்தினர்களுள் மூத்தவரான பிரபல தொழிலதிபர் திரு ராமேஷ்வர் தாஸ் பிர்லா 'கர்ரென்ட்' பத்திரிகைக்கு எழுதிய நீண்ட கடிதத்தின் சுருக்கத்தைத் தமிழாக்கித் தருவதில் மகிழ்ச்சி அடைகிறோம். — ஆசிரியர்]

நமது அரசாங்கம், சமூக வாழ்க்கையின் எந்த அம்சத்தையுமே சட்ட அதிகார வரம்புக்குப் புறம்பாக விட்டு வைக்கவில்லை. நம் நாட்டில் உள்ளதைப் போல் அவ்வளவு அதிகமாக சமூகத்தைப்பாதிக்கும் சட்டங்களை வேறு எந்த நாட்டிலும் காண முடியாது.

பொது ஜனங்களைப் பொறுத்த வரையில், அரசியல் கோட்பாடுகளில் அவர்களுக்கு அக்கறை இல்லை. அவர்கள் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே செல்லும் விலைவாசிகளால் நொறுக்கிக் கசக்கப்படுகின்றனர். வீட்டுச் செலவைச் சிக்கனப்படுத்துவதிலும் வரவு செலவைச் சரிக்கட்டுவதிலும்தான் அவர்களின் நாட்டம் செல்லுகிறது.

தொழிலாளர்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் சம்பள வருமானங்கள் உயர்ந்துள்ளன என்பது உண்மைதான். ஆனால் விலைவாசிகள் உயர்ந்துள்ள அளவுக்கு — அவற்றைச் சமாளிக்கும் அளவுக்கு — உயரவில்லை.

உற்பத்தியைப் பெருக்கும் திட்டங்கள் வகுக்கும்போது, எதற்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும் என்பதை உணர்ந்து செய்ய வேண்டும். உணவுத் தானியங்களின் உற்பத்தி முதலிடம் பெற வேண்டும். ஆண்டுதோறும் அமெரிக்காவிலிருந்து பி. எல். 480 உதவித் திட்டத்தின் கீழ் பெருவாரியான உணவுப் பண்டங்கள் இறக்குமதி ஆகின்றன. எவ்வளவு காலம் இம்மாதிரி நாம் உணவுக்குப் பிச்சை எடுத்துக் கொண்டிருக்க முடியும்? தனது வாழ்க்கைக்கே பிச்சை எடுக்க வேண்டியுள்ள ஒரு நாடு ஒருகாலும் சுதந்திரமாகவும், பலமுள்ளதாகவும் இருக்க முடியாது.

நமது அரசாங்கம் ஏகபோக உரிமை கமிஷனை (Monopoly commission) சமீபத்தில் அமைத்திருக்கிறது. செல்வமும், பொருளாதார ஆதிக்கமும் எந்த அளவுக்கு எப்படித் தேங்கிக் கிடக்கின்றன என்பதை இந்தக் கமிஷன் ஆராய்ச்சி செய்யும். ஆனால் இந்தச் செல்வம் எங்கே யிருக்கிறது?

ஓர் உதாரணம்: ஒருவருக்கு ஐந்து லட்சத்திலிருந்து பத்து லட்சம் ரூபாய் வரையில் மதிப்புள்ள சொத்து 1935ல் இருந்தது என்று வைத்துக் கொள்வோம். அதே சொத்தும், ஆஸ்தியும் இப்போதுள்ள விலைவாசி விகிதப்படி ஐம்பது லட்சம் மதிப்புள்ளதாக ஆகும். இதனால் சொந்தக்காரனுக்கு அதிக சொத்தோ, ஆஸ்தியோ புதிதாகக் கிடைத்து விட்டதாக ஆகாது. விலைவாசி மாறுதல்களினால் ஏற்படும் வித்தியாசங்களினால் தோன்றும் அதிக மதிப்பு பொய்யானது. பண வீக்கத்தினால் தோன்றுவது. அந்தக் காலத்தில் (1935ம் ஆண்டில்) வரி விகிதங்களின் சுமை பத்து அல்லது 12 சதவீதத்துக்கு மேல் இருந்ததில்லை.

அதே மனிதனுடைய நிலைமையை இப்போதுள்ள சூழ்நிலையில் ஒப்பு நோக்கினால், அவன் செல்வத்தின் உண்மை மதிப்பில், (ரூபாயின் உண்மை மதிப்பைக் கொண்டு கணக்கிட்டால்) உயர்வு ஏதும் இருக்காது. ஆனாலும் வரிகள் மூலம் தனது வருமானம் முழுவதையும் (100 சதத்துக்கு மேலும்) சர்க்காருக்குச் செலுத்த வேண்டிய கொடுமைக்கு ஆளாக வேண்டி யிருக்கிறது. இதனால் அவனுடைய வருமானம் மட்டுமின்றி, முன்னோர் சேர்த்து வைத்த சேமிப்புத் தொகையும் கரைந்து போகின்றன.

நமது அமைச்சர்கள் இப்போது வாழும் பங்களாக்களைக் கட்ட ஒன்று அல்லது ஒன்றரை லட்சம் ரூபாய்தான் அந்தக் காலத்தில் பிடித்திருக்கும். அந்தக் கட்டிடங்கள் ஒவ்வொன்றின் மதிப்பும் இப்போது பன்மடங்கு அதிகரித்திருக்கிறது.

ஆனால் இந்தப் பங்களாக்கள் அவற்றில் வசிக்கும் அமைச்சர்களுக்குச் சொந்தமன்று. ஆகவே அவற்றின் தற்போதைய மதிப்பின்படி அவற்றுக்காகச் செல்வ வரி செலுத்த வேண்டிய நிர்ப்பந்தம் அவர்களுக்கு இல்லை. இதே பங்களாக்கள் தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமாக இருந்தால், அவர்கள் அதற்காகப் பெரிய அளவு செல்வவரி கட்ட வேண்டும். வாரிசுக்காரர்களுக்கு அவை மாறும்போது, அநேகமாக அவற்றின் முழு மதிப்பையும் ''எஸ்டேட்'' வரி விழுங்கிவிடும்!

காந்திஜியைப் பின்பற்றுபவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் மந்திரிகள் பலர் விமானப் பயணத்துக்கு மட்டும் மாதம் 2000 – 2500 ரூபாய் செலவு செய்வதைப் பார்த்தால் வியப்பாகவே யிருக்கிறது.

அவர்களைக் கண்டனம் செய்வதற்காக இதைச் சொல்லவில்லை. நான் வற்புறுத்திச் சொல்ல வந்த விஷயம் என்னவென்றால், இம்மாதிரி அதிகச் செலவு செய்யப்படுவதிலிருந்து அவர்கள் எல்லோரும் திடீரென்று பெரும் பணக்காரர்களாக மாறி விட்டார்கள் என்று எண்ணுவது தவறு. அதேபோல் தொழில் துறையில் ஈடுபட்டுள்ளவர்கள் செலவு செய்தால், அது அவர்களின் சொந்தச் செல்வம் அதிகரித்து விட்டது என்பதைக் குறிக்காது.

''இதற்கெல்லாம் பரிகாரம்தான் என்ன?'' என்று கேட்கத் தோன்றும். என்னுடைய கருத்துப்படி இதற்கெல்லாம் ஒரே பரிகாரம் தான் உண்டு. எல்லாத் துறைகளிலும் உற்பத்தி கணிசமாகப் பெருக வேண்டும். உற்பத்தி அதிகரிப்பதன் மூலமே விலைவாசிகளைக் குறைக்க முடியும். அப்போதுதான் மக்களுக்குத் திருப்தி ஏற்படும்.

உற்பத்தி பெருகுவதற்குச் சாதகமான சூழ்நிலையை எப்படி உண்டாக்குவது?

முதலாவது, தவறான கருத்துக்களைக் கொண்ட கொள்கைகளால் நாடு அலைக்கழிக்கப்படுவதைத் தடுத்து, சரியான பாதையில் அதைச் செலுத்த வேண்டும். இதை உறுதியுடன் செய்யக் கூடிய விவேகமும், ஆற்றலும் கொண்ட தலைமை வேண்டும். இப்போது தலைவர்கள் என்று சொல்லிக் கொள்ளுபவர்களெல்லாம் நாட்டுக்கு நல்வழி காட்டாமல், தாங்களே மற்றவர்கள் ஆதிக்கத்துக் குட்பட்டு நடந்து கொள்ளுகின்றனர்.









# விண்வெளியும் ஆழ்கடலும்

க. ராஜேந்திரன்

**ப**ல நூற்றாண்டுகளுக்கு முன்னால் கானகத்தில் வசித்து வந்த ஆதிகாலத்து மனிதன் ஒருவன் தன்னைவிட ஓரளவுக்கு நாகரிக வளர்ச்சியுற்றிருந்த மற்றொரு மனிதனைப் பார்த்தான். அம்மனிதன் நடந்து வரவில்லை. ஒரு குதிரை மேல் ஆரோகணித்துக் கையில் வில்லும் அம்பும் ஏந்திக் காட்டில் வேட்டையாட வந்திருந்தான். கற்கால மனிதனுக்கோ குதிரை வேறு, அதன் மீது அமர்ந்திருக்கும் மனிதன் வேறு என்று பிரித்துப் பார்க்கத் தெரியவில்லை. பாதி குதிரையாகவும் பாதி மனிதனாகவும் தோற்றமளிக்கும் ஒரு விசித்திரப் பிராணி இது என்று எண்ணிக் கொண்டு பயந்துபோய்த் திரும்பி ஓடினான். தன் சகாக்களுக்குத் தான் கண்ட விநோத ஜந்துவைப் படம் போட்டுக் காட்டினான். மார்பளவுக்கு மனித உருவமும் அதற்குக் கீழே குதிரை வடிவமும் கொண்ட அந்தப் படம் பின்னால் ஸெண்டார் என்று பெயர் பெற்றது.

பிரிட்டிஷ் கடற்படைக் காரியாலயத்தில் யாரோ ஒருவருக்குத் தங்கள் விமானம் சுமக்கும் கப்பல்களில் ஒன்றுக்கு ஸெண்டார் என்று பெயர் வைக்கலாம் என்ற அபூர்வமான யோசனை உதித்தது. பாதிக் குதிரையாகவும் பாதி மனிதனாகவும் காட்சி தரும் ஸென்டாரைப் போலவே போர் விமானங்களைச் சுமப்பதும் போர்க் கப்பலாகவும் விளங்குவதுமான ஒரு மாபெரும் கலத்துக்கு அப்பெயர் எவ்வளவு பொருத்தம்! கையில் வில்லும் அம்பும் ஏந்தி நிற்கும் ஸெண்டாரைப் போலவே இந்தப் படத்தைத் தன் இலச்சினையாகப் பெற்றிருக்கும் இக் கப்பலும் எக்கணமும் போருக்குச் சித்தமாகவே நிற்கும் என்றல்லவா பொருள் கொள்ள வேண்டும்?

''பிரிட்டிஷ் கடற்படையைச் சேர்ந்த ஸெண்டார் சென்னைக்கு வந்திருக்கிறது. அதை நீங்கள் காண வாருங்கள்'' என்ற அழைப்புக் கிடைத்ததும் மிகுந்த உற்சாகத்துடன் புறப்பட்டேன் நான் — ஆழ்கடலில் மிதக்கும் கப்பலையும் அது சுமந்து செல்லும் விண்வெளியில் பறக்கக் கூடிய விமானங்களையும் ஆர்வத்துடன் காணச் சென்ற எனக்கு, பத்திரிகைப் பிரதிநிதிகளை வரவேற்கக் காத்திருந்த கடற்கொள்ளைக்காரர்களைக் கண்டதும் வயிற்றைக் கலக்க ஆரம்பித்துவிட்டது. லாங்ஜான் ஸில்வர், காப்டன் பிளட், புளூபியர்ட் போன்ற பயங்கரமான மனிதர்களை நான் ஆங்கில நாவல்களில் சந்தித்துத் தைரியமாகச் சிரித்திருக்கிறேன். இங்கு அவர்களை நேருக்கு நேராகப் பார்க்க நேர்ந்ததும் சிரிப்பு எங்கோ ஓடி ஒளிந்துகொண்டது!

''நீங்கள்... நீங்கள்...?'' என்று இழுத்தேன். ''எங்கள் வேஷத்தைக் கேட்கிறீர்களா? சில அனாதைக் குழந்தைகளைச் சேவாசமாஜத்திலிருந்து தருவித்துக் கப்பலில் அவர்களுக்கு விருந்து வைக்கிறோம். குழந்தைகளைக் குஷிப்படுத்த இந்த வேஷம்!''

நான் பெருமூச்சு விட்டேன். இளங்கன்று பயமறியாது என்பது எவ்வளவு உண்மை!

ஃ ஃ ஃ

**வி**மானம் சுமக்கும் கப்பல் என்பது ஒரு தனி உலகம். அங்கே விமான தளமும் உண்டு. மாலுமிகள் விளையாடும் ஒரு பகுதியுமுண்டு. அதைச் செலுத்திப் போகவும் துப்புரவாக வைத்திருக்கவும் போர் என்று வந்தால் அதில் பங்கு கொள்ளவும் தேவைப்படும் 1844பேர்களும் கப்பலில் தங்க இடமுண்டு. தையல்

கடை முதல் ஆஸ்பத்திரி வரையில் சகலவித மான வசதிகளும் இருக்கின்றன.

சென்னைத் துறைமுகத்துக்கு ஸென்டார் எதிர்பார்த்ததை விட ஒரு நாள் தாமத மாகவே வந்து சேர்ந்தது. இதற்குக் கார ணத்தைக் காப்டன் ஸ்மைனர் விளக்கினார். வங்காள விரிகுடாவில் மிதந்த ஒரு வாணிபக் கப்பலிலிருந்து இவர்களுக்கு ஒரு ரேடியோச் செய்தி கிடைத்ததாம். அக்கப்பலில் அப் பெண்டிஸைட்டிஸ்ஸுடன் ஒரு நோயாளி போராடிக் கொண்டிருப்பதாக அறிந்ததும் உடனே ஸென்டார் அந்த வாணிபக் கப்பலை அணுகியது. நோயாளி ஹெலிகாப்டரில் ஸென்டாருக்கு அழைத்து வரப்பட்டார். சிகிச்சை நடந்தது. நோயாளி குணமடைந்து வருகிறார்.

விமானம் சுமக்கும் கப்பலின் பல பாகங் களுக்கும் அழைத்துப் போய்க் காட்டப் பிரபல ஹாலிவுட் நட்சத்திரம் டைரான் பவரைப் போல் தோற்றம் கொண்ட ஓர் அதிகாரியை எங்களுடன் அனுப்பி வைத்தார் காப்டன்.

கப்பலின் அடித்தளத்தில் விக்ஸென் (பெண் நரி) என்ற பெயர் கொண்ட ஜெட் விமானங் களும் பல ஹெலிகாப்டர் விமானங்களும் கான்னெட் எனப்படும் முன்புறம் ப்ரொப் பெல்லர் விசிறி கொண்ட விமானங்களும் இருந்தன. குறைந்த இடத்தில் நிறைய விமானங்களை நிறுத்தி வைக்க வசதியாக இவற்றின் இறக்கைகளை மேல் நோக்கி மடிக்குமாறு அமைத்திருக்கிறார்கள். ஹெலி காப்டர்களின் மேலே உள்ள விசிறியின் அலகுகளும் பின் நோக்கி மடிந்து கொள் கின்றன. விமானங்களை மேல் தளத்துக் குக் கொண்டு போகவும் கீழ்த் தளத் துக்கு இறக்கிச் செல்லவும் மாபெரும் 'லிப்ட்' இயங்குகிறது. நாங்கள் சென்ற சமயம் கப்பலைத் துப்புரவாகவும் சரியாக இயங்குகிற மாதிரியாகவும் வைத்திருக்க மாலுமிகளும் பொறி இயல் நிபுணர்களும் உழைக்கும் நேரம். வீடோ, இயந்திரமோ, தொழிற்சாலையோ எதுவானாலும் சரி; ஒரு குற்றம் குறை இல்லாமல் எல்லாம் கச்சித மாக இருந்தால் ஆங்கில மொழியில் 'கப்பலைப்போன்று உள்ளது' (Ship shape) என்று சொல்வது வழக்கில் இருக்கிறது. ஆகவே கப்பலை அதுவும் ஒரு போர்க் கப்பலை அப்பழுக்கின்றியும் பழுதின் றியும் வைத்திருப்பது எவ் வளவு அவசியம்? கப்பலையும் விமானங்களையும் சுத்தம் செய்து பழுது பார்க்கும் அந்த வேலைக்கு ஏற்ப அநேக மாக அனைவருமே அழுக் கேறிய நீல நிறக் கால்சராய் களையும் சட்டைகளையும் அணிந்திருந்ததே அவர்கள் கப்பலைச் சுத்தமாக வைத்தி ருப்பதில் எத்தனை சிரத்தை காட்டுகிறார்கள் என்பதைத் தெளிவாக்கியது. அவர்கள் தங்கள் ஆடைகளைச் சுத்த மாக வைத்திருப்பதில் கவனம் செலுத்தினால் கப்பல் எப்படித் துப்புரவாக இருக்க முடியும்? விமான இயந்திரங்களையெல்லாம் நிபுணர்கள் பரிசோதித்து அவசியமான இடங்களைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தார்கள்.

இவர்களெல்லாம் உழைத்தபோது அவர் களுடைய கை, கால்களின் முறுக்கேறிய தசை நார்கள் அதிர்ந்தன. கரங்களில் நடன நங் கையின் வடிவமாக அவர்களில் பலர் பச்சை குத்திக் கொண்டிருந்ததால் அவர்கள் உழைக் கும்போதெல்லாம் அவள் ஆடி அவர்களை மகிழ்வித்துக் கொண்டிருந்தாள்!

கப்பலுக்குள் தன்னந்தனியாகப் புகுந்து விட்டால் கண்ணைக் கட்டிக் காட்டில் விட் டதுபோல்தான் இருக்கும். அத்தனை திருப் பங்கள், வளைவுகள். வேஷ்டி செருப்பினடியில் அகப்பட்டுக் கிழியாமல் அந்தக் கைப்பிடி இல்லாத குறுகலான படிக்கட்டுகளில் சமா ளித்துக்கொண்டு ஏறி இறங்குவது சர்க்கஸ் வித்தை செய்வது போலத்தான். 'ணங்' என்று தலை முட்டிக்கொள்ளாத நிலை வாயில் களோ, புது பெயிண்ட் விரலில் ஒட்டிக் கொள்ளாத கதவுகளோ இல்லை.

நமக்குத்தான் இதெல்லாம் சிரமமாக இருக்கும். இங்கேயே யிருக்கும் மாலுமி களுக்கு இவை பழகிப் போகும். காலை ஆறு மணி முதல் மாலை நாலு மணி வரை அவர்கள் உழைக்கிறார்கள். அதன் பிறகு விளையாட்டு, சினிமா என்றெல்லாம் பொழுதுபோக்கப் பல வசதிகள் செய்து தரப்பட்டிருக்கின்றன.

''இங்கே இந்த நாற்காலியில்தான் காப் டன் உட்கார்ந்துகொண்டு கப்பலைச் செலுத்த உத்தரவுகள் கொடுப்பார்'' என்று ஓர் அறைக்கு வந்ததும் கூறினார் உடன் வந்த அதிகாரி. நாலாபுறமும் பார்க்க வசதியாகக் கண்ணாடிச் சுவர் கொண்ட அந்த அறையில் காப்டனின் நாற்காலிக்கு முன்னால் பல டெலி போன்களும் ஏராளமான ஸ்விட்சுகளும் இருந்தன. ஒரு பக்கத்தில் திசை காட்டும் கருவியும் (காம்பஸ்) இன்னொரு பக்கம் ஒரு மேஜை மீது அப்போது கப்பல் சென்று கொண்டிருக்கும் மார்க்கத் தைக் குறிக்கும் தேசப் பட மும் இருந்தன.

1947ல் வெள்ளோட்டம் நடந்த இக்கப்பலில் மூன்று விமான ஸ்குவாட்ரன்கள் உள்ளன. ஒரு ஸ்குவாட்ரன் என்பது பதினெட்டு விமானங் களாகும். விமானப் படைக் கும் இதற்கும் சம்பந்தம் கிடையாது. இவையெல்லாம் கடற்படையைச் சேர்ந்த விமானங்களே. 27,000 டன் எடையுள்ள இக்கப்பலின் மேல்தளம் 754 அடி நீளம் உள்ளது.

நிலப்பரப்பில் அமைந்த விமானத் தளங்களில் உள்ள நீண்ட 'ரன் அவே'க்களில் விமானங்கள் ஓடிப் படிப்படி யாக வேகத்தை அதிகரித்துக்



ஜான்விரின்

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக் கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்திலுல் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் கிடைக்கும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ்—
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலை

PT.G.7 TAM.



கொண்டு பின்னர் மேலே பறக்கின்றன. ஆனல் குறைந்த நீளமே உள்ள கப்பல் மேல் தளத்திலிருந்து விமானம் எப்படி வானில் ஏற முடியும்? கப்பல் தளத்தில் விமானம் ஓடுகிற வேகத்துடன் கப்பல் கடலில் விரைந்து செல்லும் வேகமும் சேர்ந்து கொள்கிறது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். விமானம் சுமக்கும் கப்பல், காற்று வீசும் திசைக்கு நேர் எதிர்த்திசையில் வேகமாகச் செல்லும் போது விமானங்கள் மேல் தளத்தில் ஓடி உயரே ஏறிப் பறக்கும். இதற்கு மேலும் உதவ 'காடபுல்ட்' என்னும் சாதனத்தைப் பயன்படுத்துகிறார்கள். உண்டி வில்லிலிருந்து விடுபட்டுப் பறக்கும் கல்லைப் போல் விமானம் இந்தச் சாதனத்தால் விசையுடன் உந்தித் தள்ளப்படும்.

விமானங்கள் திரும்பவும் கப்பலில் வந்து இறங்குகையில் அதன் சக்கரங்கள் உடலை விட்டுக் கீழ் நோக்கி நீளுவது போலவே ஒரு கொக்கியும் அடிவாரத்திலிருந்து சற்று நீளும். சக்கரம் கப்பலின் மேல் தளத்தைத் தொட்டு உருள ஆரம்பித்ததும் இந்தக் கொக்கி குறுக்குவாட்டில் போடப்பட்டிருக்கும் கம்பிகளுள் ஒன்றில் மாட்டிக்கொள்ளும். விமானத்தின் வேகத்தைக் கட்டுப்படுத்தி இழுக்கும் இந்தக் கம்பி. விமானத்தை நிறுத்த இவ்வாறு போடப்பட்டுள்ள பல கம்பிகளையும் தாண்டி விமானம் சென்றுவிடலாம் சில தருணங்களில். கொக்கி சரியாக மாட்டிக் கொள்ளாது போகலாம். அதற்காக இந்தத் தடுப்புக் கம்பிகளுக்கு அப்பால் ஒரு கம்பி வலையைச் செங்குத்தாக உயர்த்தி விரித்திருப்பார்கள். விமானம் கடலில் விழுந்துவிடாமல் இந்த வலை காக்கும்.

1914ல் முதன் முதலாக உருவாக்கப்பட்ட விமானம் சுமக்கும் கப்பலுக்குப் பிறகு கடந்த ஐம்பது வருடங்களில் இந்த ரகக் கப்பல்களில் எவ்வளவோ முன்னேற்றகரமான மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன.

இவற்றில் முக்கியமான மாறுதல், கோணல் தளம் **(Angled deck)** என்பதாகும். இம்முறையில் கப்பலின் நீளத்தை யொட்டி விமானம் இறங்கி ஏறும் பாதை நேராக அமையாமல் (மேல் படம்) ஒரு மூலையையும் மற்றொரு மூலையையும் இணைக்கும் விதத்தில் கோணலாய் அமைந்திருக்கும். (கீழ்ப் படம்) இதனல் ரன் அவேயின் நீளம் அதிகரித்து விட்டதாய்க் கூற முடியாது. என்ருலும் விமானங்கள் இறங்கி ஏறுகையில் நேரக் கூடிய விபத்துக்கள் வெகுவாகக் குறைந்து போயிருக்கின்றன. பாதையின் இருபுறமும் ஒளியைப் பிரதிபலிக்கும் நிலைக் கண்ணாடிகளை வைத்திருப்பார்கள். இது விமான பைலட்டுக்குத் தான் சரியான மார்க்கத்தில்தான் இறங்குகிரேம் என்பதை அறிவுறுத்தும். இப்போதெல்லாம் அநேகமாகக் கம்பி வலைகளை உபயோகிப்பதே கிடையாது. அதனல் விமானங்களுக்குச் சேதம் உண்டாகின்றன என்பது தான் காரணம். விமானத்தின் அடிவாரத்தில் உள்ள கொக்கி, தடுப்புக் கம்பியில் மாட்டிக் கொள்ளாதிருந்து விட்டால் விமானி மீண்டும் விமானத்தை ஆகாயத்தில் பறக்கச் செய்து மறுமுறையும் கப்பல் தளத்தில் அதனை இறக்குவார். அபூர்வமாகச் சில சமயங்களில் விமானத்தின் சக்கரமோ அல்லது கொக்கியோ உடலை விட்டுக் கீழ் நோக்கி இறங்க மறுக்கும். அதைக் கீழே இறக்குவதற்கான விசை பழுதுபட்டிருக்கும். அத்தகைய தருணங்களில் தான் கம்பி வலையைப் பயன்படுத்துவார்கள், விமானியைக் காப்பாற்ற. ஹெச். எம். எஸ். ஸெண்டாரில் மிகுந்த வேகத்துடன் செல்லும் ஜெட் விமானங்களையும் இரவு நேரத்தில்கூட மிகச் சுலபமாகக் கப்பல் தளத்தில் இறக்குகிருர்கள்; மீண்டும் மேலே ஏறச் செய்கிருர்கள். விமானங்கள் இறங்கி ஏறுவதை யெல்லாம் கண்ணாடிச் சுவர் கொண்ட அறையில் அமர்ந்தபடி ரேர் அட்மிரல் ஜான் கிரின் மேற்பார்வையிட்டுக் கொண்டிருப்பார். விமானங்கள் சென்று திரும்புவதைப் படம் பிடித்து அவருக்குக் காட்டும் டெலிவிஷன் காமிராக்களும் திரைகளும்கூட உள்ளன.

தப்பித் தவறி ஏதேனும் விபத்து நேர்ந்தால் கடலில் தத்தளிப்போரைக் காப்பாற்ற ஹெலிகாப்டர்கள் அருகில் வட்டமிட்டுக் கொண்டே யிருக்கும். இதைத் தவிர ஹெலிகாப்டர்களுக்கு வேறு ஒரு முக்கிய வேலையும் உண்டு. எதிரிகளின் நீர் மூழ்கிக் கப்பல்களைக் கண்டுபிடிக்கும் பொறுப்பு ஹெலிகாப்டருடையது. கடல் மட்டத்துக்குச் சற்று மேலாகப் பறக்கும் ஹெலிகாப்டரிலிருந்து நீருக்குள் இறக்கப்படும் ஒரு கருவி வெகு தூரத்தில் செல்லும் நீர் மூழ்கிக் கப்பல்களிலிருந்து எழும்பும் சத்தத்தின் எதிரொலி அலைகளால் பாதிக்கப்படும். அதன் விளைவாக நீர் மூழ்கி எந்தத் திசையில் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்பதையும் குறிப்பிட்டுக் காட்டும் இக்கருவி.



ஜெட் விமானங்களில் ஒன்று வானில் பறக்கும் போது பெட்ரோல் தீர்ந்து போய்விடும் நிலையில் இருந்தால் என்ன செய்வது? உடனே மற்றொரு ஜெட் விமானம் அதற்கு மேலாக அதே வேகத்தில் பறந்து போகும். இரண்டு விமானங்களின் பெட்ரோல் டாங்குகளுக்கும் இடையில் ஒரு குழல் நீண்டு பொருத்திக்

## குட்டிக் கதை

அவள் கோபித்துக் கொண்டு பிறந்தகத்துக்குப் போய்விட்டாள். ரொம்ப நல்லதாய்ப் போயிற்று! மத்தியானம் ஆபீஸில் தயிர் சாதத்தை வேண்டாவெறுப்பாக விழுங்க வேண்டாம்; ஹோட்டலில் டிபன் சாப்பிடலாம். சாயங்காலம் சரியாக ஐந்தரை மணிக்கு வீட்டுக்குப் போய் ஆஜராக வேண்டும் என்பதில்லை; குஷாலாக நண்பர்களுடன் அரட்டை அடித்துக் கொண்டிருந்து விட்டு மெள்ளப் போகலாம். ஹோட்டலிலோ தினுசு தினுசாக நாளைக்கு ஒரு சமையல். அவள் என்ன என்னைக் காய்கறி வாங்கி வரச் சொல்லிக் கஷ்டப்படுத்துகிறாளா; அல்லது, ''கொஞ்சம் அடுப்பைப் பற்ற வைத்துக் கொடுங்களேன்.. ஈர விறகு கண் அவிகிறது'' என்று தொணதொணக்கிறாளா? சினிமா, நாடகம் என்று போய்த்தானாக வேண்டும் என்பதில்லை. அப்படியே போனாலும் பாதிப் பணம் மிச்சம்! மாதக் கடைசியில் 'காப்பிப் பொடியில்லை' என்று பாத்திரத்தைக் கவிழ்த்துக் காண்பிப்பாள்: இப்போது யாருமில்லை. வேலைக்காரியுடன் சண்டை போட்டு ஊரைக் கூட்டுபவள் நல்ல வேளையாக இல்லை. வீடு அமைதியாக இருக்கிறது. ஞாயிற்றுக்கிழமைகளில் கூரையிலிருந்து கொஞ்சம் ஒட்டடை தொங்கினால் வீடு கெட்டு அழுகியா போய்விடும்? ஹாய்யாக ஈஸிசேரில் சாய்ந்து கொண்டு படிப்பேன்; அப்படியே கண்ணை இருட்டிக் கொண்டு வந்தால் ஆனந்தமாய்த் தூங்குவேன். ஆகா! இந்தத் தனிமை சுகத்துக்கு ஈடு இணை ஏது? ஆனால் இத்தனை இன்பங்களையும் இருந்த இடம் தெரியாமல் ஒதுக்கி என்னை விசனிக்கச் செய்து விடுகிறது எனக்குள்ள ஒரே ஒரு ஏக்கம். அவளைக் காணாத ஏக்கம்தான் அது!

கொள்ளும். கீழே உள்ள விமானம் பெட்ரோலைக் குடிக்கும்; கவலையின்றிப் பறக்கும்!

**வி**மானம் சுமக்கும் கப்பல்கள் சுலபமாக எதிரியின் தாக்குதலுக்கு இலக்காகி அழிந்து விடும் என்று பொதுவான அபிப்பிராயம் நிலவுகிறது. இக்கப்பல், தான் செல்வதற்கு மட்டுமல்லாது தன் மீது இருக்கும் விமானங்கள் பறப்பதற்கும் தேவையான அளவுக்குப் பெட்ரோலை ஏற்றிச் செல்ல வேண்டியிருக்கிறது. இதனால் தீப்பிடிக்கும் அபாயம் மற்றக் கப்பல்களைவிட அதிகம்தான். எனினும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் எதிரிக் கப்பல்களையும் விமானங்களையும் அழிக்கவும் அதனிடம் சக்தி வாய்ந்த பீரங்கிகளும் உள்ளன. விமானங்கள் தூக்கிச் சென்று போடும் குண்டுகள் வேறு!

ஸெண்டாரை நாங்கள் பார்க்கப் போய் இருந்த போது சென்னைத் துறைமுகத்தில் நமது ஒரே ஒரு விமானம் சுமக்கும் கப்பலான ஐ. என். எஸ். விக்ரான்ட்டும் இருந்தது. 'பெயிண்ட்' அடிக்கப்படுவதற்கும் பழுது பார்க்கப்படுவதற்கும் அங்கு அது வந்திருப்பதாயும் விமானங்களை யெல்லாம் பம்பாயில் உள்ள ராணுவ விமான நிலையத்தில் இறக்கி இருப்பதாயும் பேசிக் கொண்டார்கள். விமானங்கள் இல்லாத விக்ரான்ட்டின் மேல் தளம் திருப்பதிக்குச் சென்று வந்த பக்தனின் தலையைப் போல்தான் இருந்தது. விக்ரான்ட்டின் அதிகாரிகளும் ஸெண்டாரின் அதிகாரிகளும் ஒன்று கூடி அளவளாவினார்கள் என்றும் கேள்விப்பட்டு மகிழ்ந்தேன். ஆனால் கப்பல் தளபதிகள்மட்டும் கூடிப் பேசினால் போதுமா? ஜனநாயகப் பற்றுதல் கொண்ட நம்மிரு நாடுகளின் அரசாங்கங்கள் அல்லவா ராணுவ முஸ்தீப்புகள் பற்றித் தீவிரமாகப் பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டும்? இந்தியாவைப் போன்று புதிதாகச் சுதந்திரம் பெற்ற ஏழை ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளை எப்போதும் கம்யூனிஸ அபாயம் சூழ்ந்து கொண்டேதான் இருக்கும். இவைகளில் எத்தனை நாடுகளுக்கு ஒரே ஒரு விமானம் சுமக்கும் கப்பலை வாங்கக்கூடிய சக்தியாவது இருக்கிறது? எப்படியோ யானையை வாங்கிக் கட்டினாலும் அதற்குத் தீனி யார் போடுவது?

தற்காலத்திய நவீன கடற்படையின் அரசியாகக் கருதப்படுவது விமானங்கள் சுமக்கும் கப்பல்தான். நடுக்கடலில் நடக்கும் யுத்தங்கள் ஒருபுறமிருக்க, துறைமுகப் பட்டினங்களிலும் உள்நாட்டிலும் நடக்கும் யுத்தங்களில்கூட இக் கப்பல் பங்கு கொள்ள முடியும். இரண்டாவது உலக யுத்தத்தின்போது பேர்ல் ஹார்பரிலும் சிங்கப்பூரிலும் அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் பெருத்த சேதங்களை விளைவித்தது ஜப்பானிய விமானம் சுமக்கும் கப்பல்கள்தான். பிற்பாடு டோக்கியோ மீது குண்டு வீசித் தாக்குதல் நடத்தவும் ஜப்பானின் கடற்படை அடியோடு அழிவதற்கும் முக்கிய காரணமாயிருந்தவை அமெரிக்க விமானம் சுமக்கும் கப்பல்களே.

இரண்டாவது உலக யுத்தத்தின் போது மட்டும் அமெரிக்காவில் 27 மிகப் பெரிய விமானம் சுமக்கும் கப்பல்களையும் 110 துணை விமானம் சுமக்கும் கப்பல்களையும் தயாரித்தார்கள். அதே யுத்தத்தில் உருத் தெரியாமல் அழிந்துபோன பல்வேறு விதமான அமெரிக்கப் போர்க் கப்பல்களின் எண்ணிக்கை 148. பிரிட்டன் மொத்தம் 256 கப்பல்களை இந்த யுத்தத்தில் பறி கொடுத்தது. இதை யெல்லாம் பார்க்கும்போது சிறிதோ, பெரிதோ யுத்தம் என்று வந்து விட்டால் எந்த நாடும் இந்தக் காலத்தில் தனித்து நின்று போராட முடியாது என்பதும் கூட்டுச் சேராக் கொள்கை என்பது கறிக்குதவாத ஏட்டுச் சுரைக்காய் என்பதும் தெளிவாகிறதல்லவா?

# கலைமணியின் மணிவிழா

சோமு

'ராமாயணம் படிக்கிற வக்கில் என்றால் கட்சிக்காரர்களுக்குப் பயந்தான்!' என்று டி. கே. சி. சொல்லுவார்கள். ராமாயணம் படிக்கிற வக்கில்களிடம் 'கேஸ்' கட்டுக்களைக் கொடுப்பதற்கு அஞ்சுவார்களாம் அந்தக் காலத்துக் கட்சிக்காரர்கள்! அப்படியானால் இராமாயணம் படிக்கிற ஒரு ரெவின்யூ அதிகாரியைப் பற்றி அவருடைய மேலுத்தியோகஸ்தர்கள் என்ன நினைப்பார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

ஆனால் இதற்கு ஒரு விதிவிலக்கு நண்பர் தொ.மு. பாஸ்கரத்தொண்டைமான் அவர்கள்!

தொண்டைமான் அவர்களுக்கு மிகச் சிறு வயதிலிருந்தே தமிழ் இலக்கியத்தில் ஈடு இணையற்ற மோகம்! பி.ஏ. தேறியதும், அவருடைய ஜாதகம், அவரை 'ரெவின்யூ இலாகா'வில் கொண்டு சேர்த்தது. ஆனால் அவருடைய உள்ளமோ தமிழ்த் தாயின் சரண கமலங்களிலே தமிழ் மணத்தை அனுபவித்துக் கொண்டிருந்தது! எனினும் தொண்டைமான் அவர்களுடைய அதிருஷ்டம் என்னவென்றால், உள்ளத்தின் நாட்டத்துக்கும் உத்தியோகத்தின் கடமைக்கும் போராட்டம் ஏற்படாதவாறு வாழ்க்கை நடந்தது!

தொண்டைமான் அவர்கள் ரெவின்யூ இலாகாவில் ஒரு சாதாரண குமாஸ்தாவாகச் சேர்ந்தார். பணியிலிருந்து ஓய்வு பெறும்போது ஜில்லாக் கலெக்டராக விளங்கினார். இத்தனை ஆண்டுகளிலும் அவருக்கு மேலதிகாரிகளாக இருந்த பெரியவர்கள் பலர். அவர்களில் யாரிடம் போய்க் கேட்டாலும் சரி, தொண்டைமான் ஒரு சிறந்த ரெவின்யூ அதிகாரி என்று தயக்கமில்லாமல் சொல்லுவார்கள்.! அதே சமயம் இலக்கிய அன்பர்களிடம் கேட்டாலோ, ''தொண்டைமான்தானே, அவர் செய்துள்ள இலக்கிய சேவையைப்போல் தமிழ் நாட்டு மக்களிடம் நேர்முகமான இலக்கிய சேவை செய்துள்ளவர் வேறு யார்?'' என்று துணிந்து சொல்லுவார்கள்! இதுதான் தொண்டைமான் அவர்களின் ஜாதக விசேஷம்!

இம்மாதம் 19ந் தேதி ஞாயிறன்று தொண்டைமான் அவர்களுக்கு அறுபதாம் கலியாணம் நடக்கிறது. இந்த மணிவிழாக் குழுவினரின் பெயர் வரிசைகளையும் ஏற்பாடுகளையும் பார்த்தால், பலதிறப்பட்ட அறிஞர்களையும் வெவ்வேறு திசைகளிலே செல்லுகிற மனப்பான்மையுடைய பல பெரிய பெரிய மனிதர்களையும் தொண்டைமான் அவர்கள் எப்படியெல்லாம் ஒன்று கூட்டி மயக்கியடித்திருக்கிறார் என்பது புலனாகும்.

ஆம்: தொண்டைமான் அவர்களோடு பழகியுள்ள எல்லாருமே அவருடைய அன்பிலே மயங்குவார்கள், அவருடைய குரு பக்தியிலே மயங்குவார்கள்; அவருடைய இலக்கியப் பேச்சிலே, அவருடைய கலை விளக்கங்களிலே, அவருடைய நகைச்சுவைகளிலே, அவருடைய மத்தாப்பு வீச்சிலே, வாண வேடிக்கைகளிலே மயங்கிப்போவார்கள்! அப்படிப்பட்டவர்கள் இப்போது ''அறுபது வயதா, நம்முடைய தொண்டைமானுக்கா!'' என்று கேட்டு அப்படியே அந்த அதிசயத்திலும் மயக்கம் போட்டுச் சரிந்து விடுவார்கள்!! தொண்டைமானுடைய முகத்தைப் பார்த்தால் இப்போதும் இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும், அந்த முகத்திலே ஒரு பசலைப் பண்பு மிதக்கும். அத்தனை பெரிய சரீரத்தில் ஒரு குழந்தை முகம் நின்று நண்பர்களோடு சிரித்துப் பேசும்! இதயத்திலோ என்றால் மூவா இளமையும், ஒரு குழந்தையின் ஆனந்தமும் குதிபோட்டுக் கொண்டிருக்கும்! உண்மையில் தொண்டைமான் அவர்களின் வெற்றிகள் அனைத்துக்குமே காரணம் இந்தக் குழந்தைக் குதூகலம் தான்!



திரு பாஸ்கரத் தொண்டைமான்



''இன்று முதல் நைட் டூட்டி என்கிறீர்களே! நீங்கள் ஏதாவது தொழிற்சாலையில் வேலை செய்கிறீர்களோ?''

''ஊகும்! மாதத்தில் முதல் பதினைந்து நாள் இரவில் குழந்தை அழாமல் பார்த்துக்கொள்ள வேண்டிய முறை என் மனைவியினுடையது. இன்று முதல் என் டூட்டி ஆரம்பம்!''

இத்தனை வயதிலும் எங்காவது ஒரு புதிய கோயில், ஒரு புதிய சிற்பம், எங்கோ ஒரு காட்டுக்குள்ளே ஒரு மூலையில் ஒளிந்து கொண்டு இருக்கிறது என்று சொல்லிப் பாருங்கள்! உடனே கிளம்பி விடுவார் அவர். ஒரு புதிய பாடல் ஏதோ ஒரு நூலிலே எங்கோ ஓர் ஓரத்திலே தென்பட்டால் போதும், தொண்டைமான் அவர்களின் இதயத்துக்குள்ளே இருக்கும் சிசு எழுந்து நடமாடும், நடனமே ஆடும்!

தமிழ் நாட்டுக் கோயில்களையும், வட நாட்டுக் கோவில்களையும் சென்று சென்று கண்டு ஆனந்தித்துத் தமிழ் மக்களுக்குத் தமது ஆனந்தத்தை எல்லாம் மிச்சம் வைக்காமல் வழங்கிய அவருடைய அரிய சேவையைக் கல்கி அன்பர்கள் அறிவார்கள். சாதாரண மக்களுக்குப் புரியாது என்று பண்டிதர்கள் ஒதுக்கிச் சென்ற சிற்ப நுட்பங்களையும் சமயத் தத்துவங்களையும், ஒப்பற்ற நட்புறவோடு நின்று ''பழகு தமிழிலே'' பொதிந்து தந்த மகத்தான பெருமை தொண்டைமான் அவர்களையே சாரும். தஞ்சை மாவட்டத்தில் டி. கே. பழனியப்பன் அவர்கள் கலெக்டராக இருந்தபோது தொண்டைமான் அவர்களுடைய ஊக்கத்திலும் ஆற்றலிலும் உருவாகிய தஞ்சைக் கலைக் கண்காட்சி நிலையம், தொண்டைமான் அவர்களின் கலைப் பணிக்கு ஒரு நிரந்தரமான எடுத்துக்காட்டாகும்! வயல்களிலும், பாழ்வெளிகளிலும் மறைந்து நின்ற தேவதைகள் இப்படி ஒரு தொண்டைமானைத் தேர்ந்தெடுத்து, ஒரு கலைக் கோயிலைத் தமக்கென்று நிர்மாணித்துக் கொண்டன என்று சொன்னாலும் பொருத்தமே!

சிறு வயதில் தமது தந்தையார் மாபெரும் கலைஞர் முத்தையாத் தொண்டைமான் அவர்களிடமிருந்து கலையாற்றலை வழிச் சொத்தாகப் பெற்றுக் கொண்டார் தொண்டைமான். பிறகு டாக்டர் சேதுப் பிள்ளையவர்களின் தொடர்பு காரணமாகக் கலையோடு வந்து தமிழ் இணைந்தது! இத்தனை பண்புகளும் சேர்ந்து டி. கே. சி. அவர்களின் ''வட்டத் தொட்டி'' என்னும் இலக்கிய உலைக்கூடத்திலே இளகி, உருகி, உருப்பெற்று இன்றுள்ள இனிய வடிவத்தை அடைந்தன. இதுவே தொண்டைமான் அவர்களுடைய பரிணாம வரலாறு! இத்தனை வளர்ச்சியும் ரெவின்யூ இலாகாவுக்குள்ளே இருந்து கொண்டே நடந்திருக்கிறது என்றால் இது ஒரு பெரிய அதிசயம்தானே!

மணி விழாக் கொண்டாடுகிற நண்பர் தமது வாழ்க்கைப் பாதையை மகிழ்ச்சியோடு திரும்பிப் பார்க்கலாம். பாதை நெடுகிலும் கலைச் சிற்பங்கள் பல வரிசை வரிசையாகக் காட்சி தருகின்றன. 'மாடங்களோடும் கோபுரங்களோடும் கற்கோயில்கள் பல, சொற்கோயில்கள் பல! இவை மட்டுமா! இல்லை. இந்தக் கோயில்கள், சிற்பங்கள் ஆகியவற்றுக்கு மத்தியிலே, நட்புறவோடு நடந்து வருகிற நண்பர்கள், அவரால் உதவி செய்யப்பட்டு வாழ்க்கைப் பாதையிலே முன்னேறி நடக்கிற பல உத்தியோகஸ்தர்கள், தொண்டர்கள்; அவருடைய கலைக் கட்டுரைகளிலே இதயம் களிக்கும் கல்கி அன்பர்கள், அவருடைய சொற்பொழிவுகளைக் கேட்டுத் திளைக்கும் இலக்கிய ரசிகர்கள் — இப்படி ஒரு பெரிய மனித சமூகமே தொண்டைமான் அவர்களுக்குப் பக்கத்திலே வாழ்க்கைப் பாதையின் இரு மருங்கிலும் நடந்து வருகிறது. இது எத்தகைய பாக்கியம்!

பாக்கியசாலியான இந்த நண்பருக்கு மணி விழாக் கொண்டாடும் இந்நாளிலே அவருடைய 'வட்டத் தொட்டி'ச் சகாக்களின் சார்பிலும், கல்கியன்பர்களின் சார்பிலும் எனது அன்பைச் செலுத்துவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்.

ஜூலை 18 உ முதல்

எம்.ஜி.ஆர்.

அளிக்கும்

சத்யா மூவீஸ்

# தெய்வத்தாய்




ELEGANT

டைரக்ஷன்
P. மாதவன்

இசை
விஸ்வநாதன்-ராமமூர்த்தி

# சிரிக்கவும் சிந்திக்கவும்

''ஒருவன் பள்ளிக்கூடத்துக்கே செல்லாதவனாயிருந்தால் ஒரு ரயில் பெட்டியில் உள்ள சாமான்களை மட்டிலுமே திருடலாம். சர்வகலாசாலைக்குச் சென்று பட்டம் பெற்றவனோ, தண்டவாளம், உட்பட, ரயில் கம்பெனியையே திருடிக் கொண்டு போய்விடக் கூடும்.''

—தியோடர் ரூஸ்வெல்ட்

ஃ ஃ ஃ

ரஷ்யப் பிரதமர், பத்திரிகை நிருபர்களுக்கு அத்தானோ, அம்மான்சேயோ அல்ல. இருந்தாலும் அவரைப் பற்றி எழுதும்போது 'நிகிடா', 'கே' என்றெல்லாம் செல்லமாகக் குறிப்பிடுவார்கள். காரணம் இதுதான்:

எந்த ஒரு பிரசங்கம், அல்லது சம்பவத்தை எடுத்துக் கொண்டாலும் அது ஒரு செய்தியாக அமையுமா என்று நிருபர்கள் எடைபோட்டுப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கும். ஆனால், குருஷேவைப் பற்றிய வரை இந்தக் கவலை கிடையாது. அவர் வெறும் 'செய்தி'யல்ல. 'ருசிகரமான செய்தி'.

மற்ற அரசியல் தலைவர்கள் பேசுவதையும் செய்வதையும் பற்றி உத்தேசமாகக் கற்பனை செய்துவிட முடியும். 'கே'யின் பேச்சும் கடைசியில் உலக சமாதானம், 'கம்யூனிஸ சொர்க்கம்' இந்தப் பல்லவியில்தான் வந்து முடியும். ஆனால் மற்றபடி என்ன பேசுவார், என்ன செய்வார் என்று முதல் தர நிருபராலும் ஊகிக்க முடியாது.

சமீபத்தில் அவர் டென்மார்க்குக்கு விஜயம் செய்திருந்தபோது ஒரு மாட்டுப் பண்ணையைப் பார்க்கச் சென்றிருந்தார். அங்கே நூற்றைம்பது பத்திரிகை நிருபர்களும், போட்டோப் பிடிப்பவர்களுமாக அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.



குருஷேவ்

''உங்களையெல்லாம் நான் ஏற்கனவே பார்த்துவிட்டேனே. இப்போது மாடுகளைப் பார்க்க வேண்டும். போகிறீர்களா? இல்லை; ஒரு காளைமாட்டை அவிழ்த்து விடச் சொல்லட்டுமா?'' என்றார்.

ஓடென்ஸ் என்ற ஊரில் நகர மண்டபத்துக்கு அவரும் அவரது மனைவி நினாவும் சென்றார்கள். அங்கேயுள்ள கல்யாண 'அறை'க்குள் நுழைந்து, ''இங்கே என்ன நடக்கிறது?'' என்று மேயரை விசாரித்தார்.

''நீங்கள் உட்கார்ந்து கொள்ளுங்கள் சொல்கிறேன்'' என்றார் மேயர்.

இருவரும் உட்கார்ந்ததும், மேயர் விவாக சம்பந்தமான 'வாக்குறுதி' வாக்கியங்களைப் படித்துவிட்டு, ''இரண்டு பேரும் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொள்ளுங்கள்!'' என்றார்.

'மணமகனும், மணமகளும்' அப்படியே செய்தார்கள்.

நிகிடாவும், நினாவும் மறுபடியும் 'இரண்டாம் முறை'யாகக் கல்யாணம் செய்து கொண்டார்கள். போட்டோப் பிடிக்கும் நண்பர்களைத் திருப்தி செய்வதற்காக நமது கல்யாணங்களில் சில சமயங்களில் இரண்டாவது முறை தாலி கட்டுவது போல!

வேடிக்கையாகப் பேச வேண்டும், கோமாளித்தனமாக நடந்துகொள்ள வேண்டும் என்று திட்டம் போட்டுக் கொண்டாலும் அவர் போன்று பேசிக் காரியங்களைச் செய்ய முடியாது. அதெல்லாம் அவருக்குத்தானே வருகிறது.

அவரது தலையின் பின் பகுதி நகைச்சுவை மன்னரான வோட் ஹௌஸினைதைப் போல் அமைந்திருக்கிறது. நிகிடாவின் நகைச்சுவை உணர்ச்சி நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து வருமாக!

ஹிட்லர், கலியாணஞ் செய்துகொண்டிருந்தால் அவர் நகைச்சுவையுள்ளவராக இருந்திருந்தால் உலக யுத்தமே ஏற்பட்டிராது என்று சொல்வதுண்டு. நிகிடா விஷயத்தில் அந்த இரண்டு அம்சங்களும் இருக்கின்றனவே. அதனால்தான் யுத்தம் ஒத்திப் போடப்பட்டு வருவதோடு ரஷ்யக் கம்யூனிஸத்தின் கடுமையும் குறைந்து வருகிறது போலும்.

ஃ ஃ ஃ

இப்போதெல்லாம் கல்லூரியிலுள்ள ஆசனங்கள் மாணவர்களுக்கு இடம் கொடுக்க மாட்டேனென்று தகராறு செய்கின்றன. ஆனால் அவை அப்படிச் செய்யாமல் இருந்த காலத்தில் அவை எனக்கு இடமளிக்காதிருக்கும்படி செய்தேன்.

கல்லூரிகள் திறந்து விட்டன. எனக்கு உடல் நலம் சரியில்லாததால் மேலே படிப்பதைப் பற்றியே எண்ணிப் பார்க்க முடியாதிருந்தது. ஆனால் என் நண்பர்கள் கல்லூரி சென்று வருவதைப் பார்த்ததும் என்னால் சும்மா இருக்க முடியவில்லை. நாங்கள் 'பஞ்சாங்கம்' என்று அருமையாகக் கூறிவந்த எஸ். எஸ். எல். சி. ரிஜிஸ்தர் புத்தகத்தை எடுத்துக் கொண்டு கோட்டு அணிந்து, குல்லாய் வைத்துக் கொண்டு குடந்தை மாநகர் அரசாங்கக் கல்லூரி முதல்வர் முன் போய் நின்றேன். பிரின்ஸிபால் ஆர். எம். ஸ்டாதம் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தார். ''ஸெப்டம்பர் மாதம் ஆரம்பித்துவிட்டதே. இன்னுமா இடம் இருக்கும்?'' என்றார். நான் என்ன கெஞ்சியும் பயனில்லை. அப்போது நாடகங்களில் வரும் மந்திரிகளைத் தவிர ஸெண்ட்

ஜார்ஜ் கோட்டையில் வேலை பார்க்கும் மந்திரிகள் கிடையாது. ஆகையினல் யாரைச் சிபாரிசு பிடிக்கலாம் என்று மண்டையை (என்னுடையதை) உடைத்துக் கொண்டிருந்தேன். பிரின்ஸிபால் பல மாணவர்களோடு சகஜமாகப் பழகுவார் என்றும், அவர்கள் வீட்டுக்குப் போய் பழையது, 'எரிச்ச கறி' முதலியன சாப்பிடுவது உண்டு என்றும் கேள்விப்பட்டேன். என் தந்தை அவர்களுள் சிலரைப் பிடித்துச் சிபாரிசு செய்யச் செய்தார். அதிலும் பயனில்லை. கடைசியில் ஸ்டாதம், ''நீ இந்தியன் டிபென்ஸ் போர்'ஸில் சேர்ந்தால், நீ ராணுவ சேவை செய்கிறாய் என்று கூறிச் சலுகை காட்ட முடியும்'' என்றார். அந்த ஐ. டி. எப் என்பது இப்போது உள்ள 'ஹோம் கார்டு' மாதிரி.

என் தலை தானாகவே ஆடி, சம்மதத்தைத் தெரிவித்தது. என்னை அளந்து பார்த்தார்கள். உயரம் நாலரை அடியோ என்னமோ இருந்தது. அது போதவில்லை. ஆகையால் சேர்த்துக் கொள்வதற்கில்லை; கல்லூரியில் இடம் கொடுப்பதற்கில்லை என்று சொல்லி விட்டார். அதனல் எனக்கு ஒன்றும் கஷ்டமில்லை. (ஏனென்றால், வெளியூரில் உள்ள சில கல்லூரிகளில் தர்மசத்திரம் மாதிரி எப்போதும் இடம் இருந்து கொண்டிருக்கும். அவற்றுள் ஒன்றில் சேர்ந்தேன்.) பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குத்தான் நஷ்டம். நான் பிரதேச சேனையில் சேர்ந்தேன் என்று கேள்விப்பட்ட மாத்திரத்தில் ஜெர்மானிய கெய்ஸர் யுத்தத்தை நிறுத்திவிட்டிருக்கக் கூடும்!



'சென்னை எஞ்சினியரிங் கல்லூரி மாணவர்கள் குறைந்தது 41 கிலோ கிராம் (90பவுண்டு) எடையுள்ளவர்களாய் இருந்தாலன்றி, அவர்கள் நூற்றுக்கு நூற்றுப் பத்து மார்க்குகள் வாங்கியிருந்தாலும் சேர்த்துக்கொள்ள முடியாது' என்று ஒரு மந்திரி கூறியதைப் பற்றிப் படித்த போது எனக்கு எனது உயரக் குறைவு பற்றிய சம்பவம் ஞாபகத்துக்கு வந்தது.

எஞ்சினியரிங் தொழிலில் ஈடுபடவிருக்கும் மாணவர்கள் நல்ல 'எடை' உள்ளவர்களாயிருப்பது விரும்பத் தக்கதுதான். ஆனல் அதிக மார்க்கு வாங்கியிருக்கும் குறைந்த எடையுள்ள மாணவர்களுக்கு இடமளிக்காதது நியாயமன்று. அவர்கள் விஷயத்தில் விதிவிலக்குச் செய்ய வேண்டும். அத்தகையவர்களைக் கல்லூரியில் சேர்த்துக் கொண்டு அவர்களுடைய அறிவு வளர்ச்சியுடன் உடல் வளர்ச்சியிலும் புரொபஸர்கள் சற்றுக் கவனம் செலுத்தலாமே? ஒரே வருஷத்தில் நல்ல தேகப் பயிற்சி, ஆகாரம் ஆகியவற்றால் அவர்கள் உடல் நிலையைத் தேறச் செய்ய முடியாதா என்ன?

எஞ்சினியர்கள் சிமெண்ட் மூட்டைகளையும், இரும்பு கர்டர்களையும் தூக்கப் போவதில்லையே.

நல்ல எடையுள்ளவர்கள்தான் உழைக்க முடியும் என்பதுமில்லை. பந்தயக் குதிரைகளை ஓட்டும் ஜாக்கிகளை எடுத்துக் கொள்ளுங்கள். அவர்கள் தங்களுக்கு எத்தனை வயதானலும் 100, 105 பவுண்டுகளுக்கு மேல் கனமாயுள்ளவர்களாயிருக்க விரும்புவதில்லை. கால் பவுண்டு எடை அதிகமானலும் இராத் தூக்கமில்லாமல் கவலைப்படுவார்கள். அவ்வளவு இலேசான உடல் உள்ளவர்கள்; மணிக்குச் சுமார் முப்பத்தைந்து மைல் வேகத்துடன் பாய்ந்து செல்லும் 1000 பவுண்டு எடையுள்ள குதிரைகளை அடக்குகிறார்கள். வெற்றிக் கம்பத்தினிடம் வரும்போது தங்கள் கைகளாலும் கால்களாலும் குதிரைகளை முன்னுக்குத் தள்ளுகிறார்கள்.

எதற்கும் உச்சவரம்பு விதிக்கும் வியாதியுள்ள அரசாங்கம் எஞ்சினியரிங் கல்லூரி மாணவர்கள் எடை விஷயத்தில் ஏதாவது உச்சவரம்பு விதித்திருக்கிறார்களா, தெரியவில்லை. பதினேழு வயதுள்ள மாணவன் 150 பவுண்டு எடையுள்ளவனயிருக்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவனுக்கு இருதய வியாதி ஏற்படுமே! பயிற்சி முகாம்களில் அவன் சிற்றானைக்குட்டி மாதிரிதானே அசைந்து நடந்து வருவான்?

போதிய எடை இல்லாத மாணவன், அரசாங்கம் வெளியிட்டுள்ள இந்த விளம்பரத்தைக் காண்பித்து, ''தேசத்தை எதிரியினிடமிருந்து காப்பாற்றுவதற்காக வயிற்றைப் பெல்டால் இறுகக் கட்டிக் கொண்டு விட்டேன். அதனல் அதிகம் சாப்பிடவில்லை. 89 பவுண்டுதான் கனமுள்ளவனயிருக்கிறேன்'' என்று சொல்லலாமல்லவா ?

ஃ ஃ ஃ

மாஜி அமெரிக்க ஜனதிபதி வுட்ரோ வில்ஸன் ஒரு சமயம் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது நடுவில் கொஞ்ச நேரம் திடீரென்று நின்று விட்டார். சற்று முன்னல் சென்ற மெய்காப்பாளர் ஓடோடியும் வந்தார்.

''ஒன்றுமில்லை. ஒரு பையன் எனக்கு அழகு காண்பித்தான்'' என்றார் ஜனதிபதி.

''அவனை நான்.....''

''ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. நான் பதிலுக்கு அவனுக்கு அழகு காண்பித்தேன். ஓடிப் போய் விட்டான்'' என்றார் வில்ஸன்.

நெல்லூர் ஹோட்டல்காரர்கள் சமீபத்தில் இந்த உத்தியைக் கையாண்டார்கள். சில ஹோட்டல் சிப்பந்திகள் அதன் முன் நின்று மறியல் செய்தார்கள். போலீஸ்காரர்கள் உதவி செய்ய வரவில்லை. ஊரில் உள்ள எல்லா ஹோட்டல்காரர்களும் சேர்ந்து புது விதமாகப் பதில் மறியல் செய்தார்கள். அவர்கள் தங்கள் ஹோட்டல்களில் விற்பனைக்கு எதுவும் வைக்காமல் நன்றாகத் திறந்து விட்டு விட்டு உட்கார்ந்திருந்தார்கள்.

முடிவு: மறியல் நின்று விட்டது!—என்.ஆர்.

## அத்தியாயம் ஐம்பது

# தென்றலும் புயலும்

பிச்சுமணி தன் பேபி ஆஸ்டின் காரை ஓட்டி வந்தான் என்பதைவிட, கார்தான் அவனை ஓட்டி வந்தது என்று சொல்ல வேண்டும். ஏனென்றால், அவனுடைய உள்ளமெல்லாம் உமாவிடமே ஓட்டிக் கொண்டிருந்தது. காரின் முன் ஸீட்டில் அப்போது உமா தன் அருகில் உட்கார்ந்து இருப்பது போன்ற ஒரு பிரமையும் உண்டாயிற்று. அவளுடைய வாளிப்பான உடல் தோற்றம், மெழுகுப் பொம்மை போன்ற பொலிவு, அன்பு ததும்பும் கரு விழிகள், ஆசைப் புன்முறுவலை அடக்க முயலும் உதடுகள், நாணச் சிவப்பேறிய கன்னக் கதுப்புகள், பூங்கொடி போல் பின்னிக் கொள்ளக்கூடிய மிருதுவான கைகள், தன் வசமிழந்து மூடிய கண்ணிமைகள் அத்தனையும்



# குண்டு மல்லிகை

பிச்சுமணியின் அருகிலேயே — அவனுடைய கைக் கெட்டும் தூரத்திலேயே — இருப்பது போல் தோன்றியது.

அதையொட்டி இளமையின் குறும்புத்தனங்களோடு பிச்சுமணியின் காதல் உள்ளத்தில் பலப் பல விதமான கற்பனைகளும் எழும்பின.

தெருவின் திருப்பங்களிலும், நொடி பள்ளங்களிலும் அவன் வேண்டும் என்றே 'படார் படார்' என்று தன் காரைத் திருப்புகிறான். உமா அங்குமிங்கும் குலுங்கி அடிக்கடி அவன் தோள் மீது சாய்கிறாள். அப்போதெல்லாம் பிச்சுமணி தன் ஒரு கையால் உமாவின் கழுத்தை மிருதுவாகப் பற்றிக் கொள்கிறான். அவளுடைய கூந்தலை வாஞ்சையோடு தடவுகிறான். அவளுடைய கன்னங்களை ரசனையோடு வருடுகிறான்; அல்லது செல்லமாகக் கிள்ளுகிறான். அப்புறம் அவளை அவன் கல்யாணம் செய்து கொள்ளுகிறான். அவனுடைய தகர டப்பா காரின் சப்த ஜாலங்களே மேள தாளங்களாக மாறுகின்றன. அதன் பிறகு தன் மாளிகையில் வெகு நாட்களாகப் பூட்டிக் கிடக்கும் ராணிமகாலைத் திறந்து அதில் உமாவைக் கொலுவீற்றிருக்கச் செய்து அவளைப் பிரமிக்க வைக்கிறான். அவளோடு எப்படியெப்படியெல்லாமோ குடும்பம் நடத்துகிறான். அவளை ஆட்டி வைத்து அதிகாரம் பண்ணுகிறான். கடைசியில், 'என்னைச் சின்னப் பையன் என்று நினைத்தாயே, இப்போது பார்!' என்கிறான். 'நீங்கள் பெரிய ஆள்தான்' என்று சொல்லிவிட்டு உமா அப்படியே அவனிடம் சரணடைந்து விடுகிறாள். அவளை அப்படியே பிச்சுமணி தூக்கி நிறுத்தி, தன் கைகளுக்குள் துவளும் அவளுடைய முகத்தை மெல்ல நிமிர்த்தி அவளுடைய கண்களில் ததும்பும் ஆனந்தக் கண்ணீரை யெல்லாம் தன் கண்களாலேயே துடைக்கிறான். இருவரும் கலகலவென்று சிரிக்கிறார்கள். அந்தச் சிரிப்பிலே இழைந்து ஒன்றி விடுகிறார்கள்.

அதே சமயம் பிச்சுமணியின் தாத்தா தம் மாளிகையில் சுவர்க் கடிகாரத்

தையே பார்த்துக் கொண்டு வேறுவித மான கற்பனைகளில் ஆழ்ந்திருந்தார்.

சுவர்க் கடிகாரத்தில் இரவு மணி ஏழரை ஆகிவிட்டது. பிச்சுமணி இன்னும் வீட்டுக்கு வந்து சேரவில்லையே என்று மேஜர் ராமதுரைக்குக் கோப மாகவும் வந்தது.

அன்று லலிதாவின் வீட்டில் இரவு எட்டு மணிக்கு அவளுடைய அப்பா சில பெரிய மனிதர்களுக்கு விருந்து நடத்துவதாகச் சொல்லித் தாத்தா வும் பேரனும் அந்த விருந்துக்கு அவ சியம் வர வேண்டும் என்று அழைப்பு விடுத்திருந்தார். அவர்களை அழைத் துப் போக லலிதாவே ஆறு மணிக்கு வந்துவிட்டாள். பிச்சுமணிக்காகத்தான் அவள் வந்திருக்கிறாள் என்பது கிழவருக் குத் தெளிவாகவே புரிந்தது. அதனால் அவர் நளினமாக, ''நான் எதுக்கம்மா? நான் கிழவன்! உணவுக் கட்டுப்பாட்டை மீறி நான் விருந்து சாப்பிட முடியாது. என் பேரப் பயலை மட்டும் அழைத்துக் கொண்டு போ!'' என்றும் கூறி விட் டார். ஆனால் ஏழு மணியாகியும் பிச்சு மணி வரவில்லை. அதனால் கிழவர், ''நீ போம்மா, லலிதா! உன் வீட்டில் விருந்தாளிகளாக வரும் சிநேகிதிகளை யெல்லாம் நீ வரவேற்க வேண்டியிருக் கும். அந்தப் பயல் பிச்சுமணி வந்ததும் நேரே உங்கள் வீட்டுக்கு அனுப்பி வைக் கிறேன்!'' என்று சொல்லும்படி நேர்ந் தது. லலிதா தன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டே போய் விட்டாள். அது கிழவரின் நெஞ்சை உறுத்தியது.

சுவர்க் கடிகாரத்தில் மணி ஏழே முக்காலும் ஆகி விட்டது. 'இந்த மடப்பயல் பிச்சுமணி இன்னும் வந்து சேரவில்லையே?' என்று மேஜர் ராம துரை கறுவினார். துப்பாக்கிக் குழல் போன்ற ஒரு சீமைச் சுருட்டை எடுத் துப் பற்ற வைத்து எக்ஸ்பிரஸ் ரயில் போல் வேகமாகக் 'குப் குப்'பென்று புகையை ஊதித் தள்ளிக் கொண்டே யிருந்தார்.

அவருடைய சிந்தனைகள் பலவாறாக வும் தடம் புரண்டன. 'இந்த மடப் பயல் பிச்சுமணி எங்கே போனான்....? அந்த வாத்தியாரம்மா வின் வீட்டுக்குக் காதல் பாடம் படிக்கப் போய் விட்டானா?' இந்த எண்ணம் உதித்ததும் கிழவரின் வறண்ட உத டுகளில் வறட்சியான



அரு. ராமநாதன்

ஒரு புன்முறுவல் நெளிந்து கசப் பூட்டியது. பிச்சு மணியை விட அந்த வாத்தியா ரம்மா உமா வய தில் மூத்தவள் என்று டாக்டர் ஜகந்நாதன் ஒரு சமயம் அவரிடம் சொன்னபோது, அந்த உமா அதிகம் வய தானவள் என்றும் மகா தந்திரமான கூனி யென்றுமே அவர் தம் மனத்தில் உருவகப்படுத்திக் கொண்டு விட்டார். அந்தக் கற்பனை உருவகத்தின் முன்னால் அவர் ஒரு முறை நேரில் பார்த்த உமாவின் அழகு, இளமை எல்லாம்கூட மறைந்து போய் விட்டன. பெண்களே மகா தந்திர மான குள்ள நரிகள் என்கிற அபிப் பிராயத்தில் பெண் இனத்தையே வெறுத்து வந்த அவருக்கு லலிதாவைப் பொறுத்த வரைதான் அந்தச் சித்தாந் தம் ஓரளவு மாறியிருந்ததே தவிர, வாத்தியாரம்மா உமாவைப் பொறுத்த வரை அந்தச் சித்தாந்தத்தோடு கூடிய வெறுப்பு பன்மடங்காகப் பெருகியிருந்

து. தமக்கு ஒரே வாரிசான தம் குமாரனை முன்னொரு காலத்தில் ஒரு நாடகக்காரி கவர்ந்து இழுத்துக் கொண்டு போய் உருத் தெரியாதபடி அழித்து விட்டது போதாதென்று இப்போது தம் வம்சத்துக்குரிய ஒரே பேரனையும் கவர்ந்திழுத்துப் போய்த் தம் வீர பரம்பரையை அழித்து விடவே உமாவின் உருவத்தில் ஒரு வாத்தியாரம்மா முனைந்திருக்கிறாள் என்று மேஜர் எண்ணமிட்டிருந்தார். அந்தச் சூழ்ச்சிக்காரியின் போதனைக்கு ஆளாகிப் பிச்சமணி தன்னை முட்டாளாக்கிக் கொண்டு விடுவானோ, தன் எதிர்காலத்தைப் பைத்தியக்காரத்தனமாக வீணாக்கிக் கொண்டு விடுவானோ என்று பெரிதும் கவலைப்பட்டார். அதனால்தான் தீர்த்த யாத்திரை என்ற பெயரில் பிச்சமணியை வெளியூருக்கு அழைத்துப் போனார்.

இளமை பற்றிக் கொள்வதற்கு மற்றொரு கொழுகொம்பு போல் கன்யாகுமரியில் லலிதா கிடைத்தாள்! அவளைப் போன்ற ஒரு பெண் பிச்சமணிக்குத் தன் குலத்தில் கிடைப்பது அபூர்வம்! லலிதாவுக்கு ஏராளமான சொத்துக்கள் இருப்பதோடு, அவளுடைய நலனில் அக்கறையுள்ள சொந்தக்காரர்களும் ஏராளமாக இருக்கிறார்கள். அவளுடைய அப்பாவுக்கும் பலதரப்பட்ட பெரிய மனிதர்கள், அதிகாரிகள் முதலானவர்களின் பழக்கமும் உண்டு. லலிதாவின் கையில் பிச்சமணியை ஒப்படைத்து விட்டால், பேரனின் எதிர்காலம் உன்னத ஸ்தானத்தை அடைந்து விடும்! அந்த நம்பிக்கையோடு கிழவர் நிம்மதியாகக் கண் மூடி விடலாம். கன்யாகுமரியில் லலிதாவும், பிச்சமணியும் பழகிய பிறகு லலிதாவின் குதூகலமான நடமாட்டத்திலிருந்து அவளைப் பிச்சமணிக்குப் பிடித்துவிட்டது என்றும் வாத்தியாரம்மாவை மறந்துவிட்டான் என்றும் தோன்றியது. அந்தச் சூட்டோடு சூடாகக் கல்யாணத்தை முடித்துவிட வேண்டும். ஆனால் அதற்குள் வாத்தியாரம்மா புகுந்து பேரனின் உள்ளத்தைக் கலைத்துவிட ஒருபோதும் இடங் கொடுக்கக் கூடாது...

அப்போது தெருக் கதவைப் படபடவென்று தட்டும் சத்தம் கேட்டது.

பட்லர் இருதயசாமி சமையல் கட்டிலிருந்து கிளம்பி வருவதற்குள் மேஜர் ராமதுரையே தம் சிம்மாசனத்திலிருந்து தாவிச் சென்று தெருக் கதவைத் திறந்தார்.

''தாத்தா! மை டியர் தாத்தா!'' என்ற பிச்சமணியின் மழலைக் குரலைக் கேட்டதுமே மேஜர் ராமதுரைக்குத் தம் கடுகடுப்பையும் மீறி முகம் மிருதுவடைந்து விட்டது.

''மடப்பயலே! ஏன் லேட்?'' என்று மேஜர் ராமதுரை தம் குரலில் ஓர் அதட்டலையும் வரவழைத்தார்.

''அதுவா தாத்தா...?'' என்று பிச்சமணி குழந்தை போல் தன் தாத்தாவின் கழுத்தைத் தன் இருகைகளாலும் கட்டிக் கொண்டு, ''நம் பேபி நடுவழியில் திடீரென்று மக்கர் பண்ணி நின்றுவிட்டது, தாத்தா!'' என்று சிரித்தான்.

''அதைத் தாஜா செய்து சரிப்படுத்திக் கொண்டு வந்தாயோ?''

''இல்லை தாத்தா! இரண்டு பேராக அதைத் தள்ளிக் கொண்டு வந்து நம் காம்பவுண்டுக்குள் நிறுத்தியிருக்கிறோம். இனி மெக்கானிக் வந்து பேபியின் மீது கைவைத்தால்தான் அது மிரண்டு போய் ஓடும்!''

''சரி சரி, கழுத்தை விடுடா, போய்ச் சீக்கிரமாகச் சென்று டிரஸ் மாற்றிக் கொண்டுவா! புதுசாகத் தைத்த டின்னர் சூட்டைப் போட்டுக்கொள்!'' என்றார் மேஜர் ராமதுரை.

மறுகணம் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல் பிச்சமணி மாடிப் படிக்கட்டில் மூன்று படிகளாகத் தாண்டி ஏறித் தன் தனி அறையை நோக்கிப் பறந்தான். அவன் முற்றிலும் புதிய ஆளாக மாறியிருப்பதாகவே தோன்றியது. தீர்த்த யாத்திரையிலிருந்து திரும்பி வந்த சில நாட்களில் அவன் பன்மடங்கு இளமையின் புத்துணர்ச்சியடைந்து அதிகத் தீவிரமாகவும் அதிகச் சுறுசுறுப்புடனும் உற்சாகத்தின் அதிகமான குறும்புத்தனங்களுடனுமே விளங்கினான். வசந்த காலத்தின் மான்குட்டிகளின் ஆனந்தத் துள்ளலும் உல்லாசப் பறவைகளின் குதூகலக் குரல்களும் அவனிடம் நிறைந்து ததும்பின. அவனுடைய இந்தப் புதிய மாற்றத்துக்கு, இந்தப் புதிய போக்குக்கு உண்மையான காரணம் என்ன என்று மேஜர் சிந்தித்தார்.

லலிதாவைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறோம் என்பதால் பேரனுக்கு இத்தகைய குதூகலம் ஏற்பட்டிருக்குமா? அல்லது....அல்லது...? அதற்குமேல் மேஜர் சிந்திக்க விரும்பவில்லை. ஆத்திரத்துடன் தம் கையிலுள்ள சுருட்டை ஓங்கி மேஜையின் மீது குத்தி அணைத்து அதைத் தூக்கித் தூர எறிந்து விட்டார். அப்போது அந்

---

பிச்சமணியைக் காண ஆர்வத்துடன் அவன் வீடு தேடிவந்த லலிதாவின் எழில் தோற்றத்தை இவ்விதழ் அட்டைச் சித்திரமாக அளிக்கிறார் ஓவியக் கலைஞர் கல்பனா:

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



கேசம் உதிருதல்

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.




### ப்யூர் சில்விக்ரீன்

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-2, சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022. பம்பாய்-1

### சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.




# Silvikrin

**சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி**

SP/J/P/7/64

தச் சுருட்டு உமாவைப் பிரதிபலிப்பது போலவே அவருக்குத் தோன்றியது. மேஜர் தம் பற்களைக் கடித்துக் கொண்டு ஒரு கடுப்புடன் சிரித்தார். தம் பேரனைக் கடிப்பதற்காக முளைத்திருக்கும் ஒரு விஷ ஜந்துவைத் தம் கையாலே நசுக்கித் தூர எறிந்துவிட்டதைப் போலவே நினைத்து அப்படிச் சிரித்தார்.

ஆனால் மூன்று நிமிஷங்கள் கழித்துப் பிச்சுமணி உடை மாற்றிக் கொண்டு திரும்பி வந்ததைப் பார்த்ததும் மேஜருக்கு ஒரு கணம் இருதயத் துடிப்பே நின்று விட்டதுபோல் முகம் சர்வ விகாரமாக மாறியது.

ஏனெனில் பிச்சுமணி இரவில் தூங்கும்போது அணிந்துகொள்ளக் கூடிய பைஜாமாவும் ஜிப்பாவும் மாட்டிக் கொண்டு, சட்டைப் பித்தான்களைக் கூடச் சரியாகப் போட்டுக் கொள்ளாமல் திறந்த மார்போடும், கிராப் கலைந்த தலையோடும் ஓர் அவதாரம் போல் வந்து நின்றான். மேலும் பெரிதாக ஒரு கொட்டாவி விட்டுத் தூக்கக் கலக்கத்துக்குரிய அபிநயங்களையெல்லாம் வெகு அழகாகக் காண்பித்தான்.

மேஜரால் பொறுக்க முடியவில்லை. "டேய், டேய்! என்னடா இது? டின்னர் சூட்டை ஏன் போட்டுக் கொள்ளவில்லை?" என்று பிரங்கி வெடிப்பது போல் கத்தினார்.

"ஏன் தாத்தா! உங்களோடு உட்கார்ந்து நம் வீட்டில் சாப்பிடவேண்டுமென்றால் இனிமேல் நான் டின்னர் சூட்டும் கோட்டும் போட்டுக் கொள்ள வேண்டுமோ?" என்று பிச்சுமணி பிணங்கினான்.

"நம் காப்டன் மருதநாயகத்தின் வீட்டில் ஒரு டின்னர் பார்ட்டி இருக்கிறது. மறந்து விட்டாயா?" என்ற மேஜரின் புருவங்கள் இடியின் மின்னல் வெட்டுகள் போல் நெறிந்தன.

"ஓ, அந்த டின்னரா? அவர் உங்கள் சிநேகிதர்..."

"என் சிநேகிதர் என்றால் உனக்கு ஒன்றுமில்லையோ... மேலும், மேலும்... அந்த வீட்டில் உனக்கு..."

"தாத்தா! நீங்களே அந்த டின்னருக்குப் போங்கள்!"

"டேய்! நான் வயதானவன்! உணவுக் கட்டுப்பாட்டை மீற முடியாது! மேலும் நீ மட்டும் அங்கே போனால் நல்லதென்று நினைத்தேன்..."

"நான் மட்டும் எதுக்காகத் தாத்தா போகிறது?"

"மடப்பயல்!" என்று குமுறிய மேஜர், "உன்னையும் ஒரு மனுஷன் என்று விருந்துக்குக் கூப்பிட்டிருக்கிறார்களே!" என்று முழக்கமிட்டார்.

அவருடைய முழக்கத்தைப் பிச்சுமணி பொருட்படுத்தவோ, அவருடைய உட்கருத்தைப் புரிந்துகொள்வதாகக் காட்டிக் கொள்ளவோ விரும்பவில்லை. அவன் தன் போக்கிலேயே உற்சாகமாக இருந்ததோடு கிழவரிடம் சிரித்து மழுப்பினான்.

"டேய்! அவர்கள் உன்னை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்! சீக்கிரம் டிரஸ் மாற்றிக் கொண்டு ஜோராக டின்னருக்குப் போ!" என்றார் மேஜர்.

"டின்னர் சாப்பிடக் கூடிய நிலையில் என் வயிறு இல்லையே தாத்தா!"

"ஏன்? பீச்சில் வேர்க்கடலை, பட்டாணி வாங்கித் தின்று வயிற்றை 'ரொப்பி'க் கொண்டிருக்கிறாயோ?"

"தாத்தா! உண்மையைச் சொல்லப் போனால் அரை டம்ளர் பால் மட்டும் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொள்ளப் போகிறேன்."

"அவர்கள் வீட்டுக்குப் போய் அந்த அரை டம்ளர் பாலைக் குடித்துவிட்டு வாயேன்!"

"அதோடு அவர்கள் என்னை விடுவார்களா? அதைச் சாப்பிடு, இதைச் சாப்பிடு, என்று தொண தொணப்பார்கள். அதிலும் லலிதா என்னைப் பீமசேனன் என்று நினைத்துக் கொண்டு எல்லாவற்றையும் அள்ளி அள்ளிப் போடுவாள்!"

"நீ சின்னவன்தானே! எதைச் சாப்பிட்டாலும், எவ்வளவு சாப்பிட்டாலும் ஜீரணித்து விடும்!"

"பிரியமில்லாவிட்டால் ஒன்றைக்கூட என்னால் தொட முடியாது தாத்தா!"

"பாவம், அந்தப் பொண்ணு லலிதா உன்னை அழைத்துப் போக இங்கே வந்து ஏழு மணி வரையில் காத்திருந்தாளடா!" என்று சொன்ன மேஜர் ராமதுரை தம் முகத்தின் கடுகடுப்பின் இடையிலும் ஓர் உவகை மினிரத் தம் கடைவிழிகளால் புன்முறுவலுடன் பிச்சுமணியைப் பார்த்துக் கொண்டே, "உனக்காக அவளே காரை ஓட்டி வந்தாளடா!" என்றார், ஏதோ தூண்டில் போடுவது போல்.

"ஐயையோ! அவளோடு காரில் போவது டேஞ்சர் தாத்தா!..."

"என்னடா டேஞ்சர்?"

"அவள் லைசென்ஸ் இல்லாமலே..."

"ம்; லைசென்ஸ் இல்லாமலே?..."

"கார் ஓட்டுகிறவள், தாத்தா! அதோடு கப்பல் போன்ற தங்கள் கார் எவ்வளவு வேகமாகப் போக

முடியும் என்று அதன் பெருமைகளைக் காட்ட ஆரம்பித்துவிடுவான் அவன்!''

''ஓ, அந்தப் பெருமையை உன்னால் பொறுக்க முடியவில்லையோ? அதை விடப் பெரிய காராக நானேயே வாங்கிக் கொள்! உன்னுடைய தகர டப்பா காரைப் பழைய இரும்புச் சாமான் கடையில் போட்டுவிடு!''

''இல்லே, தாத்தா! என் பேபியை என்னால் பிரியவே முடியாது! அது என் செல்லக் கண்ணு! அதைத் தொட்ட கையாலே இன்னொரு காரின் ஸ்டியரிங்கைத் தொடவே மாட்டேன்!''

''மடையன்! மடையன்!'' என்று கத்திய மேஜர், ''டேய், அவர்கள் வீட்டு விருந்துக்குப் பல பெரிய மனிதர்கள் வந்திருப்பார்கள். நீ எல்லோரோடும் கலகலப்பாகப் பேசிப் பழகு. நீயும் பெரிய மனுஷனாகி விடுவாய்!'' என்று ஒரு குறிப்புரையைக் குத்திக்காட்டினார்.

பிச்சுமணியோ வெகு அலட்சியமாக, ''தாத்தா! பெரிய மனுஷன் ஆகிறதிலே வெறும் பெருமையே தவிர உண்மையான சந்தோஷம் ஒன்றும் இராது!'' என்றான்.

''டேய், வீணாக விதண்டாவாதம் பண்ணிக்கொண்டிராமல் சீக்கிரம் டின்னருக்குப் போ! கொஞ்சம் லேட்டானாலும் பரவாயில்லே!''

''கார் இல்லேயே தாத்தா? என் பேபி இன்று ஸ்டிரைக் பண்ணி விட்டதே!''

''அவர்கள் வீட்டுக்கு டெலிபோன் செய்து மருதநாயகத்தின் காரையே கொண்டு வரச் சொல்லுகிறேன்!''

''அவர்கள் வீட்டு விருந்துக்கு அவர்கள் வீட்டுக் காரையே வரச் சொல்லி நான் போவதா? அது நம் பெருமைக்குக் குறைவு தாத்தா!''

''பெரிய பெருமையைக் கண்டுவிட்டான்!'' என்று குதித்த மேஜர், ''பயலே! அந்தக் காப்டன் மருதநாயகம் என் பிரெண்டடா! உனக்குக் கார் வேண்டுமென்று சொன்னால் அவனே தன் காரை ஓட்டிக்கொண்டு வந்து, உன்னை மேள தாளத்தோடு அழைத்துப் போவான்!'' என்றார்.

''அந்தக் கார் வந்து நான் போக முடியாது தாத்தா!''

''பின்னே டாக்ஸியில் போ!''

''டாக்ஸியில் போய் அவர்கள் வீட்டின் முன்னால் இறங்கினால் நன்றாக இராது தாத்தா! என் பேபி எங்கே என்று துக்கம் விசாரிக்க ஆரம்பித்து விடுவார்கள்!''

''டேய்! உன் வாய் ஜாலக்கை யாரிடம் காட்டுகிறாய்?'' என்று வீறிட்டு அலறிய மேஜர், ''டேய், போக்கிரிப் பயலே! இப்போ நீ அவர்கள் வீட்டு டின்னருக்குப் போகப் போகிறாயா இல்லையா?'' என்று இடிமுழக்கக் குரலில் தீர்மானமாகக் கேட்டார்.

பிச்சுமணியும் நிமிர்ந்து நின்றான். தன் மாயா சாகசங்கள், மயக்குத் தந்திரங்கள் எல்லாவற்றையும் விட்டு விட்டுப் போர்க்களத்தில் தனக்குச் சமதையான எதிரியைச் சமாளிக்கத் தயாரானவன் போலவே நிமிர்ந்து நின்றான்.

பிறகு அவன் அழுத்தம் திருத்தமான குரலில், ''இல்லே, தாத்தா! அவர்கள் வீட்டு விருந்துக்கு நான் போக மாட்டேன்! போகவும் முடியாது!'' என்று தீர்மானமாகவே சொல்லி விட்டான். (தொடரும்)

# ஹர்த்துவாரத்தில் கங்கா தேவி

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

கங்காத் வாரத்திற்கு
மிஞ்சின தீர்த்தம் இல்லை
கைலாயத்திற்கு மிஞ்சின
மலையில்லை
வாசுதேவனுக்கு மிஞ்சின
கடவுள் இல்லை
கங்கைக்கு மிஞ்சின
நதியில்லை

என்பது ஸ்கந்தபுராணம் கூறும் சித்தாந்தம். இதில் கங்காத்துவாரம் என்பது எங்கே இருக்கிறது என்பது கேள்வி. அது கங்கை நதி பாயும் இடத்திலேதான் இருக்க வேணும். ஆதலால் கங்கையும், கங்காத்வாரமும் சேர்ந்திருக்கிற இடம் ஒன்று இருக்க வேண்டும். ஆம், கங்காத்துவாரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளுமுன் கங்கையைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா? கங்கை என்று நினைத்தவுடனேயே கம்பன் பாடிய கங்கை என்னும் கடவுள் திருநதி என்ற அடி ஞாபகத்துக்கு வராமல் போகாது. இன்னும்,

அண்டம் மூடு அறுத்து
அந்தரத்து இழிந்து
அங்கு அவனியாள்
அலமரப் பெருகிய
மண்டு மாமணி
நீர்க் கங்கை

என்று திருமங்கை ஆழ்வாரும் பாடியிருக்கிறாரே. இப்படி அந்தரத்திழிந்து அவனியாள் அலமரப் பெருகும் கங்கையைக் காசியிலோ கல்கத்தாவிலோ காண்டல் இயலாது. அந்தக் கங்கையைக் காண்பதற்குக் கங்காத்துவாரத்துக்கே செல்ல வேண்டியதுதான். இல்லை, அதற்கும் மேலே மேலே ஏறிச் செல்ல வேண்டியதுதான். இமயமலையின் ஒரு சிறு தொடர் சிவலிக் என்னும் மலை. அந்த மலையிலுள்ள ஒரு பிளவுக்கிடையே ஓடி வருகிறது கங்கை. அந்த இடத்தையே கங்காத்துவாரம் என்று கந்த புராணம் கூறியிருக்கிறது. கங்காத்துவாரம் என்றால் என்ன இடம் என்று வேண்டுமானால் புராணம் படித்த பெரியவர்களுக்குத் தெரியலாம். ஆனால் இன்று அதனை ஹரித்துவார் என்ற பெயரில்தான் அழைக்கின்றனர். இதில்கூட ஒரு சங்கடம். அது கைலாயத்துக்கு வழி காட்டும் வாயில். ஆதலால் அதனை ஹரத்துவார் என்று சொல்ல வேண்டும் என்பர் சைவப்பெருமக்கள். இல்லை, அது பத்ரிநாராயணன் இருக்கும் வைகுண்டத்துக்குச் செல்லும் வாயிலாக இருக்கிறது. ஆதலால் ஹரித்துவார் என்றுதான் சொல்ல வேண்டும் என்பர் ஸ்ரீ வைஷ்ணவர்கள். நமக்கோ சைவ வைஷ்ணவ வேற்றுமைகள் கிடையாது. ஆதலால் நாம் நமது ஆங்கிலேய நண்பர்களுடன் சேர்ந்து நடுநிலைமையில் நின்று ஹர்த்துவார் என்றே சொல்லி விடுவோம்.

ஹர்த்துவார் செல்ல நாம் டில்லியிலிருந்து ரயிலில் புறப்படலாம். டேராடூன் செல்லும் ரயிலில் ஏறிச் சென்றால் ஹர்த்துவார் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். ஹர்த்துவாரை நெருங்கும் போது நல்ல வயல்வெளிகள் தெரியும். பார்த்தால் அவை தமிழ் நாட்டைப்போலவே இருக்கும். அங்குதான் உயர்தரமான பாசுமதி அரிசி விளைகிறது என்கின்றனர். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல் தூரத்தில் தான் கங்கையிலுள்ள ஸ்நான கட்டமான ஹரிகி பைரி என்னும் இடம் இருக்கிறது. செல்லும் வழியில் நாலு வீதிகள் பிரியும் நாற்சந்தியில் ஒரு தண்ணீர்த் தொட்டி இருக்கிறது. அதன் நடுவில் சிவபெருமானது பளிங்குக் கற்சிலை ஒன்று இருக்கிறது. இவர் சடாமகுடதாரியாகப் பத்மாசனத்தில் இருக்கிறார். இவருக்கு ஆறு திருக்கரங்கள் இருக்கின்றன. இரண்டு கைகளில் உருத்திராக்க மாலை இருக்கிறது. தொடையின்மீது வைத்திருக்கும் இரண்டு கைகளில் இரண்டு கலசங்கள் இருக்கின்றன. மற்ற இரண்டு கைகளிலும் கலசம் ஏந்தி அதன் மூலம் தமக்கே கங்காபிஷேகம் செய்தவண்ணமாகயிருக்கிறார். இன்றைய சிற்பி அமைத்த வடிவந்தான் என்றாலும் அழகாக இருக்கிறது. இவரையே மிருத்யுஞ்சயன் என்கின்றனர். ஆம், மரணமிலாப் பெருவாழ்வு வாழச் சிவபெருமானும் கங்காபிஷேகம் செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. இனி நாம் ஹரிகி பைரி என்ற இடத்துக்கே போகலாமா? அதுதானே இங்கே முக்கியமான ஸ்நான கட்டம். இக்கட்டம் நன்றாய் அகலமாய்க் கிட்டத்தட்ட நாற்பது படிகள் கொண்டதாகக் கட்டப்பட்டிருக்கிறது. கிரகணம், கும்பமேளாக் காலங்களில் எண்ணிறந்த பக்தர்கள் இந்த இடத்தில் நீராட வருவார்களாம். அப்போது பலர் இடிபட்டு மிதிபட்டு மாண்டு விடுவார்களாம். அதனால் நெருக்கமாக இருந்த இந்த ஸ்நானக் கட்டத்தை விரிவுபடுத்தி நிறையப் படிக்கட்டுகள் கட்டி வைத்திருக்கிறார்கள். இங்கு கங்கை இரண்டு பிரிவாக ஓடுகிறது. இரண்டுக்கும் மத்தியில் தீவுபோல் ஓர் இடம் அமைத்து அதில் ஒரு



ஹரித்துவாரத்தில் ஒரு காட்சி

மணிக் கூண்டையும் கட்டியிருக்கிறார்கள்: சாதாரண காலத்தில் இங்கு கங்கையில் ஆழம் அதிகம் இராது. ஆதலால் நன்றாக இறங்கி நீராடலாம்; நதித் திட்டுக்கும் போய் வர லாம். கங்கையில் பிரவாகம் வரும்போது கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேணும். இந்த ஸ்நானகட்டத்தில்தான் கங்காத்துவார ஆலயம் இருக்கிறது. அது பெரிய கோயில் அல்ல. உள்ளே இருக்கும் கங்கை அம்மனும் ஏதோ பெரிய பொம்மைபோல் இருக்கிறதே தவிர அழகுடையதாக இல்லை. இந்தக் கட்டத்தில் ஒரு கல்லில் இரண்டு பாதங்கள் போல் செதுக்கப்பட்டிருக்கின்றன. அதனையே விஷ்ணு பாதம் என்கின்றனர். திரிவிக்கிரம னாகப் பெருமாள் ஓங்கி உலகளந்து நின்ற போது, பிரம்மா கங்கை நீரைக் கொண்டே அவரது திருவடிகளைக் கழுவியிருக்கிறார். அப்படிக் கங்கை நீராடிய கழலே விஷ்ணு பாதமாக அங்கே நிலைத்திருக்கிறது. கங்கை யில் நீராடி, கங்கையம்மனைத் தரிசித்து, விஷ்ணு பாதத்தில் விழுந்து வணங்கி எழுந் தால் நமது பழவினைகள் கழன்றோடிப் போய் விடும் என்பது நம்பிக்கை. அந்த இடத்தையே பிரம்ம குண்டம் என்று அழைக்கின்றனர். இங்குதான் ஒவ்வொரு மாலையும், பெண்கள் அகல் விளக்குகளில் தீபம் ஏற்றி அவைகளைக் கங்கையில் மிதக்கவிட்டு வழிபாடு செய் கின்றனர்.

இனி நாம் இங்குள்ள மற்ற ஸ்நானக் கட்டங்களையும் கோயில்களையும் காணப் புறப் படலாம். இங்கு கங்கையின் தென் கரையில் சுபாஷ் கட்டம் என்று ஓர் இடம் இருக்கிறது. அங்கு நேதாஜி சுபாஷ்சந்திர போஸ் சிலை ஒன்று அமைத்து வைத்திருக்கிறது. அதை ஒட்டிய இடத்தில்தான் அங்குள்ள சேவா சமிதிக் கட்டடம் இருக்கிறது. இதை ஒட்டியே கௌகட், குஷாவர்த்த கட்டம் இருக்கின்றன. குஷாவர்த்த கட்டத்தில் தான் தத்தாத்ரேயர் ஆயிரம் வருஷங்கள் தவம் இருந்தார் என்பார்கள். அங்குதான் பிதுர்க்களை நினைந்து கங்கையில் பிண்டமிடு கின்றனர். இன்னும் ஸ்ராவண்நாத் கட்டம், ராமகட்டம், விஷ்ணு கட்டம், பிர்லா கட்டம் கணேஷ் கட்டம் என்று பல கட்டங்கள் இருக்கின்றன.

ஹரிகி பைரி என்னும் இடத்திலிருந்து முக்கால்மைல் வடக்கே சென்றால் அங்கு பீமகுண்டம் இருக்கிறது. இது பஞ்ச பாண்டவர்களில் ஒருவனான பீமனது குதிரை தன் குளம்பால் குதித்த இடத்தில் ஏற்பட்ட குண்டம் என்கின்றனர். இன்னும் மூன்று மைல் வடக்கே நோக்கி நடந்தால் சப்த சரோவரம் இருக்கிறது. அன்று வானிலிருந்து பாய்ந்து பெருகிய கங்கையைத் தம் ஜடா மகுடத்தில் அடக்கிப் பின்னர், பகீரதன் வேண்டிக் கொண்டபடி ஏழு கூறாகப் பெருக விட்டார் சிவபெருமான் என்பது புராணக் கதை. அப்படி ஏழு கூறாகப் பெருகி ஓடிய இடமே சப்த சரோவரம். அங்கு இருந்து தான் பல முனிவர்கள் தவம் செய்திருக்கின்ற னர் என்று கூறுகின்றனர். அதற்கேற்றாற் போல் இந்த சப்தசரோவரத்தை அடுத்த இடத்திலேயே சப்த ரிஷிகள் ஆசிரம் என்ற பெயரோடு ஓர் ஆசிரமமும் அமைத்து வைத் திருக்கிறார்கள். அதை ஒட்டி ஒரு சிவன் கோயிலும் கட்டி யிருக்கிறார்கள். இன்னும் கங்கையிலிருந்து வடியும் கால்வாய்களைப் பிரிக்கும் ஹெட்வொர்க்ஸெலாம் இங்குதான் கட்டப்பட்டிருக்கிறது.

ஹரித்துவாரைப் பழைய புராணங்களில் மாயாபுரி என்று வழங்குகின்றனர். இங்கு மாயா தேவியின் பெயரால் ஒரு கோயில் கட்டியிருக்கின்றனர். அது சிறிய கோயில்தான் என்றாலும் அங்கு பைரவ மூர்த்தத்திலிருக்கும் சிவன், மூன்று முகம் கொண்ட துர்க்கை சந் நிதிகளிருக்கின்றன. இன்னும் ஹரித்துவாரை அடுத்திருக்கும் நீல பருவதம் என்னும் இடத் தில் சண்டிதேவிக்கு ஒரு கோயில் இருக்கிறது. இது ஹரிகி பைரியிலிருந்து நாலு மைல் தூரத் தில் இருக்கிறது. அதிகாலையிலேயே புறப்பட் டால்தான் மலை ஏறச் சௌகரியமாக இருக் கும். அத்துடன் அங்கு செல்லும் யாத்திரி கர்கள் குடிப்பதற்குத் தண்ணீரும் கூடவே எடுத்துச் செல்ல வேண்டும். மலையில் குடிப்ப தற்குத் தண்ணீர் கிடையாது. ஹரித் வாருக்கு வடபுறம் நீண்டு உயர்ந்திருக்கும் சிவளிக் மலையில் மானசாதேவிக்கு ஒரு கோயில் இருக்கிறது. மானசா தேவி என்ப வள் சிவபெருமானின் மகள் என்கின்றனர். நமது புராணங்களில் இப்படி ஒரு மகள் சிவ பெருமானுக்கு உண்டென்றும் அவளை மானசா தேவி என்று அழைத்தார்கள் என்றும் நாம் படித்ததில்லை. அந்த மானசாதேவி வரசித்தி யுடையவள். வேண்டுவோர் வேண்டுவன எல்லாம் தரும் தெய்வம். காலையிலும் மாலையிலும் அங்கு பூசை நடக்கிறது; முக்கால் மைல் தூரம்தான் என்றாலும் மலை ஏறுவது சிரமமாக இருக்கும். சிரமத்துக்குத் தக்க பலன் கிடைக்கும் என்பதால் ஏறிப் பார்த்து வணக்கம் செலுத்திவிட்டே திரும்பலாம்.

இன்னும் ஒரே ஒரு இடத்தைக் காணாது திரும்பினால் நாம் ஹரித்துவாரத்தைப் பூரண மாகப் பார்த்தவர்கள் ஆக மாட்டோம். ஹரிகி பைரிக்குத் தெற்கே மூன்று மைல் தொலைவில் கங்கையின் ஒரு பிரிவான நீல தாரா என்னும் நதிக் கரையில் கங்கல் என்று ஓர் இடம் இருக்கிறது. இந்த இடத்தில்தான் சிவபெருமான் மாமனாரான தக்ஷன் இருந்து அரசு புரிந்திருக்கிறான். அவன் தன் மருமகன் தன்னை மதிக்கவில்லை என்பதற்காக ஒரு யாகம் நடத்தி அதற்குத் தன் மகளான தாக்ஷாயணியையும் மருமகன் சிவபெருமானை யும் அழையாமல் அலட்சியப்படுத்தியிருக் கிறான். என்ன இருந்தாலும் பெண்ணுக்குப் பிறந்தகத்துப் பாசம் இல்லாமல் இருக்குமா? தாக்ஷாயணி மட்டும் புறப்பட்டு யாகசாலைக்கு வந்திருக்கிறாள். தன்னை அவமானப்படுத்திய தந்தை நடத்திய யாக குண்டத்திலேயே விழுந்து உயிர் துறந்திருக்கிறாள். அவளது உடலை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டு தான் கடலையில் ஆடியிருக்கிறார் சிவபெரு மான். இதுவே அந்த இடம் என்கின்றனர். அங்கு இன்று தக்ஷேசுவர் மகாதேவ் என் னும் சிவனுக்கு ஒரு கோயில் இருக்கிறது. அத் தகைய புராணப் பிரசித்திபெற்ற இடமான கங்கல் பார்த்த திருப்தியுடன் திரும்பலாம்.

வளரும்
குழந்தைகளுக்குத்
தேவை

**KALZANA**




GRKD.61

# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | 15—00 | 7—50 |
| பர்மா, மலேயா, வெளி நாடுகள் | 18—00 | 9—00 |

தனிப் பிரதி விலை 30 காசு

சந்தா தொகை முன்னதாக அனுப்பப் படவேண்டும். வி. பி. பி. கிடையாது.

மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10




காப்பியின் பூரா மணத்தையும்
வாசனையையும் உங்களுக்கு சீல் செய்தவாறு அளிக்கிறது

**போல்ஸன்ஸ் காபி**
திருப்தியளிப்பதற்கென வறுக்கப்பட்டது

பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள்:

ஒவ்வொரு வீட்டிலும் வெண்ணெய், நெய், மாவு மற்றும் தேயிலைக்குப் போல்ஸன் பெயர்பெற்றது.

போல்ஸன் லிமிடெட் – பம்பாய் • ஆனந்த் • பாட்னா

PL 1156 A TAM EA

புதியது

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு விருப்பமானது. ஏனெனில் அது எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுடனிருக்க நான் ப்ரோடெக்ஸையே விரும்புகிறேன்"

"எனது மிருதுவான சருமத்தைப் பாதுகாப்பதால் அம்மா ப்ரோடெக்ஸையே விரும்புகிறாள்"

ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்-மிக மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.




## ப்ரோடெக்ஸ்

ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-5-7-TAM.

# அதிருஷ்டசாலி

ஆர். சூடாமணி

**ம**னம் ஏதோ ஒரு மாதிரி இருந்தது. வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை. ஆகவே வேதம் சொல்லி அனுப்பியதுமே பிரேமா கிளம்பி விட்டாள்.

''வா, பிரேமா! இதுதான் நீ புதுசா போட்ட கூடையா?''

''ஆமாம், மாமி!'' பிரேமா தன்னோடு கொண்டு வந்திருந்த சாமான்களைப் பரப்பினாள். மணிப் பின்னலில் கைப்பை, பிளாஸ்டிக் கூடை, மட்டைகள் இலைகளைக் கத்திரித்துக் காகிதத்தில் ஒட்டிச் சாயம் பூசி வைத்த சித்திரங்கள். இப்படியாக ஏதேதோ கைவேலை. பொழுது போக வேண்டுமல்லவா?

''உட்காரு. விதம் விதமாய் ஏதேதோ அதுக்குள் போட்டு வைச்சிருக்கியே. உன்னை நான் கடைசித் தரம் பார்த்ததுக்கு இப்போ! இதை யெல்லாம் பார்த்தால் எனக்கு நாம இப்படி ஒண்ணும் செய்யாமல் உக்காந்திண்டிருக்கோமேன்னு இருக்கு. ஒழியவே மாட்டேங்கிறதே.''

சொல்லி வாய் மூடுமுன் வேதத்துக்குத் தான் உளறி விட்டது புரிந்தது. 'எனக்குக் குடும்பம் இருக்கிறது. ஒழிவு இல்லை, உனக்குத்தான் வாழ்வில் இது ஒன்றே வேலை' என்ற அர்த்தம் தொனிப்பதாகப் பிரேமா கருதி விட்டாள்? தணுக்குற்று அவள் பிரேமாவை மேல் கண்ணாகப் பார்த்தாள். பிரேமாவின் முகத்தில் மாறுதலேதும் இல்லை. இதெல்லாம் பழகிப் போய் விட்ட உணர்ச்சிகளாயிருக்குமோ ? அல்லது எந்த உணர்ச்சியுமே இனி வருத்த முடியாமல் காய்த்துப் போன உள்ளத்தின் சலனமின்மையோ அது?

''இந்தப் புதுக் கூடை நன்னாயிருக்கு, பிரேமா'' என்றாள் வேதம். எதற்கோ ஈடு செய்வது போலிருந்தது அவள் பேச்சு.

''என் ஒன்றுவிட்ட கிரிஜாகிட்டேயிருந்து டிஸைன் வாங்கிண்டு வந்தேன் மாமி. அவள் ரொம்ப நாட்களாய் இதைப் போடணும்னு இருந்தாளாம். உங்களைப் போலத்தான் அவளுக்கும் ஒழியலையாம். புருஷனையும் குழந்தைகளையும் கவனிப்பாளா? பிளாஸ்டிக் ஒயர் வச்சிண்டு கூடை பின்னுவாளா?''

விமர்சனத் தொனியற்ற குரலில் சாதாரணப் பேச்சாகப் பேசினாள் பிரேமா. வேதத்துக்குக் கணப் பொழுது தோன்றி விட்டிருந்த சங்கடத்தைச் சரி செய்யும் பொருட்டு, 'எனக்கு அப்படி யெல்லாம் எதுவும் மனசைத் தைத்து விடாது' என்ற பொருளில் பேசியிருப்பாளோ ? வேதத்துக்குச் சட்டென்று பிடிபட வில்லை. பிரேமாவிடம் அவளுக்கு ஐந்து வருஷங்கள் பரிச்சயம் இருந்தது. நல்ல சுபாவம் என்று மெச்சி நட்பை வளர்த்துக் கொண்டிருந்தாள். ஒரு பர்லாங் தூரம் இருக்கும் அவள் வீடு. எப்போதாவது பிரேமா தானாக வருவாள். அவ்வப்போது வேதம் சொல்லியனுப்பித்தான் அவள் வருவது அதிகமாய் வழக்கம். காலையில் சாப்பிட்டானதும் வந்தால் மத்தியானமெல்லாம் பேச்சு, இப்படி ஏதாவது கைவேலையைப் பற்றிய சர்ச்சை. மாலையில் வேதத்தின் கணவரும் கல்லூரி, பள்ளிகளில் படிக்கும் மக்களும் வீடு திரும்பிவிட்டதும் பிரேமா தன் வீட்டுக்குக் கிளம்பி விடுவாள். இவ்வளவு பழக்கமிருந்தும் பிரேமாவை அவளுக்கு இன்னும் சரியாகப் புரியவில்லை. அவள் மனத்தில் என்னென்ன உணர்வுகள், எண்ணங்கள் ஓடுகின்றன என்பதைத் தெளிய முடியவில்லை.

''அடுத்தது என்ன போடலாம்னு இருக்கே பிரேமா ?''

''இன்னும் தீர்மானிக்கலே மாமி. உங்க பெண் அன்னிக்கு மணியிலே ஒரு ஹாண்ட் பாக் வைச்சிண்டிருந்தா பாருங்கோ, ரோஸ் கலரும் வெள்ளையுமா......''

''ஆமாம். மணியின் விலை மூணுக்குள் அடங்கியிருந்தது. அப்புறம் இரண்டு பக்கத்தையும் சேர்த்து ஜிப் போட்டுத் தைக்கத் தையல்காரனுக்குத்தான் ஏழு ரூபாய் தண்டம் அழுதோம்.''

''அந்த மாதிரி டிஸைன்லே இன்னும் கொஞ்சம் வெள்ளை வரிசைகள் அதிகமாய்,



பிளாஸ்டிக்கில் ஒண்ணு போட்டுப் பார்க்கலாமான்னு யோசிக்கிறேன்.''

''நன்றாயிருக்கும். போடேன்! ரோஜாவும் வெள்ளையும் சேர்ந்த இளஞ் சிவப்பு கண்ணுக்கே அமுதுதான்.''

அதே இளஞ்சிவப்பு, கண்ணுக்கு அழகான ஓர் இதமுள்ள வர்ணம். பிரேமாவின் உடல் நிறத்திலேயே இல்லையா என்ன? வேதம் அவளை யோசனையோடு பார்த்தாள். எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள் உலகத்தில். இப்படி ஒரு ராசி. பிரேமா பார்க்க விகாரமே இல்லை. ஒரு வகையில் அழகென்றே சொல்லலாம். களையான முகம். ஒல்லியான உடல் வாகு. பி. ஏ. படித்த பெண். பிறந்த இடமும் வசதியானதுதான். பின்னே இதை இவள் வாங்கிக் கொண்டு வந்த வரம் என்று சொல்லாமல் வேறென்ன சொல்வது? அக்கா அண்ணன் இவர்களைத் தவிர இரண்டு தங்கைகளுக்குக் கூடக் கலியாணம் நடந்தாகி விட்டது. இவளுக்காகத்தான் ஒருவனும் உலகத்தில் பிறக்கவில்லையா என்ன? பிறந்துதான் இருப்பான், நிச்சயம். அவன் எப்போது வரப் போகிறான்?

அவளுக்கு ஏக்கம் இருந்ததா? இல்லாமலா இருக்கும்? வயது முப்பத்தைந்து ஆகவில்லையா? அவளுடைய கலியாணத்தை முடித்து விடலாம் என்ற எண்ணம் பெற்றோர்களுக்கு இருக்கத்தான் செய்தது. ''எங்க பிரேமாவுக்கு ஒரு வரன் பாருங்களேன்'' என்று அவர்கள் வந்தவர்களிடமெல்லாம் சொல்லிக் கொண்டுதான் வந்தார்கள். ஆயினுமென்ன? வரும் வரன்கள் சற்று முன்னே பின்னே இருந்தால் தான் என்னவாம்? சொட்டை, சொள்ளை என்று பாதியை இவர்களே தள்ளி விடுகிறார்கள். ஒரு நல்ல வரன் போன மாதம் வந்தது. முப்பத்தெட்டு வயதுதான், முதல்தாரம்தான். அவள் சம்மதித்தாகி விட்டது. அப்போது இவள் பெற்றோர்கள் சொன்னார்களாம், ''ஜாதகம் சேரவில்லை, வேண்டாம்'' என்று! இத்தனை வயதுக்குப் பின் ஜாதகப் பொருத்தம் ஒரு பிரச்னையா? இவர்களை யார் ஜாதகம் பார்க்கச் சொன்னார்கள், ஏதோ நமக்கு நல்ல அதிருஷ்டம் என்று பெண்ணின் கையைப் பிடித்துக் கொடுக்காமல்? பிரேமாவின் மனசு அப்போது எப்படி இருந்ததோ! அதைப் பெற்றோர்கள் கவனித்ததாகத் தெரியவில்லை. வேதத்துக்குத்தான் ஆற்றாமை குமைந்தது. அவள் மனசைக் கேட்டுத் தெரிந்து கொண்டு ஆறுதலாய் இரண்டு வார்த்தைகள் சொல்ல வேண்டும் என்று அடித்துக் கொண்டது. ஆனால் இதெல்லாம் அப்படிப் பட்டென்று விசாரித்து விடுகிற விஷயமா? பூவைத் தொடுகிறாற் போன்ற கூர்சம் வேண்டும். அந்த நாசுக்கான நெருக்கத்துக்குப் பிரேமா ஒரு போதும் இடம் தரவில்லை. ஒரு மாறாத புன்னகையினால் தனக்கும் மற்றவர்களுக்குமிடையே பெருஞ் சுவர் எழுப்பி விடுகிறாள். தன் துடிப்புகளையோ இரவில் பூத்த மலர்களைப் போல் தன்னினின்று பிரியாத ரகசியங்களாகவே வைத்துக் கொண்டு வாழ்வை வேடிக்கை பார்ப்பது போன்ற ஒருவித ஒதுக்கத்துடன் எட்டவே இருந்து விடுகிறாள்.

''இதைப் பார்த்தீர்களா மாமி? சின்னச் சின்னதாய் வெட்டி, வர்ணம் செய்து ஒட்டி விட்டதில் தூர இருந்து பார்த்தால் காகிதத்தில் வரைஞ்ச ஓவியம் மாதிரியே இருக்கும்'' என்று பிரேமா ஏதேதோ சொல்லிக் கொண்டே போனாள். நேரம் மெதுவாகச் சென்றவாறு இருந்தது. வேதமும் சம்பாஷணையில் ஈடுபட்டிருந்தாலும் எண்ணங்கள் பிரேமாவைப் பற்றிய யோசனையிலேயே ஆழ்ந்திருந்தன.

இவள் மனசில் என்ன இருக்கிறது? பிரேமாவின் உருவமே விசித்திரம்தான். ஒரு வகையில் பார்த்தால் கன்னித் தேஜஸ் பொலிகிற இளமையின் சாயல். புன்னகைக் குழைவில் தூய்மையின் மலர்க் கவர்ச்சி. இன்னொரு வகையிலோ பெரும் பாரம் ஒன்றைச் சுமந்து கொண்டிருப்பது போன்ற கோடுகள் அந்த ரோஜா நிற நெற்றியிலே. வாயைச் சுற்றி எழும் புன்னகைக் கீறல் சட்டென்று முதுமையின் சுருக்கம் போல் வரியிடும். முதிர்ச்சி யெல்லாம் அநுபவத்தில் வராமல் உணர்வோடு தங்கி விட்டதில் ஓர் இரண்டுங்கெட்டான் இளைய — கிழத் தோற்றம். மிகவும் வயதாகி விட்ட குழந்தை போல முரணானதொரு கலவை.

பிரேமா ஏக்கமாகவோ வருத்தமாகவோ பேசி வேதம் கேட்டதில்லை. எல்லோரோடும் இயல்பாகப் பழகுவாள். கல கலப்பு, சிரிப்பு யாவும் வேண்டுமென்று வருவித்துக் கொண்டது போலன்றிச் சாதாரணமாகவே இருக்கும். சினிமா, நாடகம், கச்சேரி என்று கேளிக்கைகளை அநுபவிப்பாள். நினைத்துக் கொண்டால் ஏதாவது வேலைக்குப் போவாள். திடீரென்று ஒரு நாள் விட்டு விடுவாள். ஏன் என்று கேட்டால் சிரித்துக் கொண்டே, ''முதலில் வேடிக்கையாய் இருந்தது. இப்போது 'போர்' அடிக்கிறது'' என்பாள். படித்த படிப்பை வீணாக்காமல் வீட்டிலேயே நாலு பெண்களுக்கு எழுத்துச் சொல்லிக் கொடுப்பாள். அதுவும் நிலையில்லை. ''இன்னிக்குப் பாடம் முடிஞ்சுடுத்தா?'' என்று கேட்டால், ''இனி மேல் ஸ்டூடன்ஸ் வரமாட்டா. நான் வேண்டாம்னு சொல்லிட்டேன்''— என்று பதில் வந்தாலும் வரும். இப்போது இந்தக் கைவேலைகளைப் பிடித்துக் கொண்டிருக்கிறாள். இதுவும் எத்தனை நாளைக்கோ! மின்மினிப் பூச்சியின் வெளிச்சம் போல் செயல்களில் அவள் ஈடுபாடு இங்குமங்குமாய்க் கொத்திக் கொத்திப் பறந்தவாறே இருக்கும்.

''அது சரி......''

''சொல்ல மறந்தே போயிட்டேனே மாமி! நாளைக்கு அவிலேயிருந்து விமலா வருகிறாள், குழந்தைகளோட. ரெண்டு வாரமாவது இருப்பான்னு நினைக்கிறேன். வீடு கலகலப்பாயிருக்கும்'' என்று கலகலப்பாகவே கூறினாள் பிரேமா. உண்மையாகவே தங்கை, தங்கையின் குழந்தைகள் என்று பொறுமை யற்ற அன்பு அவளுக்கு. வேதம் எப்போதுமே அவளுடைய இந்தக் குணத்தைக் கண்டு வியப்படைவாள்.

''அவள் வீட்டுக்காரர் வரவில்லையா?'' என்று அவள் முகத்தைக் கூர்ந்து ஆராய்ந்தவாறே வேண்டுமென்று கேட்டாள் வேதம்.

''மாப்பிள்ளைக்கு லீவு கிடைக்கவில்லையாம்.''

அந்தச் சலனமற்ற பதிலில் சவுக்கடி பட்டது போல் வேதம் பின்னுக்குச் சுருங்கிக் கொண்டாள். தனக்கு நன்றாக வேண்டும் என்றும் தோன்றியது. பிரேமாவின் பெருந்தன்மை நிறைந்த அமைதியான முகத்துக்கெதிரே சற்று நேரம் நிற்க முடியவில்லை. ''போய்க் காப்பி கொண்டு வரேன், இப்படியே உக்காந்துண்டிரு'' என்று சாக்குச் சொல்லி விட்டு உள்ளே எழுந்து போனாள்.

ஆச்சரியமான பெண்தான் பிரேமா. அற்பத்தனமோ அறியாதவள். பெண்ணுக்குரிய ஏக்கமோ எண்ணமோ இல்லாமலேயே இருக்கிறாள்? அது சாத்தியமா? ஏன் கூடாது? சில பெண்கள் தனி வாழ்வை விரும்பியே மேற்கொள்வதில்லையா? இவள் அதைத் தானாக விரும்புகிறாளா இல்லையா என்பதை அறிய வாய்ப்பே வராமல் போனதால் அவளுக்குக் குறை இருக்கும் என்று பார்ப்பவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். இயல்பாகவே துறவு மனப்பான்மை கொண்டவளாக இருக்கலாம் என்ற சந்தேகம் எழாமற் போய் விடுகிறது.

**வே**தம் காப்பியைக் கொண்டு வந்து பிரேமாவிடம் கொடுத்து விட்டுத் தானும் அருந்தலானாள். பிற்பகல் மூன்று மணி இருக்கும்.

வாசற்புறம் அரவம் கேட்டது.

''என்ன, சௌக்கியமா?''

''ரோகிணியா? வா, வா, வா!'' வேதம் வரவேற்க, சிரித்த முகத்தோடு உள்ளே நுழைந்துவந்தவளைப் பிரேமா பார்த்து விட்டு எழுந்து நின்றாள். ''நான் அப்புறமா வரேன் மாமி, உங்களுக்கு யாரோ 'விஸிடர்' வந்திருக்காப்பலே இருக்கு'' என்றவாறே தன்னுடன் கொண்டு வந்திருந்த சாமான்களைத் திரட்ட ஆரம்பித்தாள்.

''நன்னாயிருக்கு. அதுக்காக என்ன? நீயும் 'விஸிடர்' இல்லையா? ரெண்டு பேரையும் அறிமுகப்படுத்தி வைக்கிறேன்!''

புதிதாக வந்தவள் சற்றுத் தயக்கத்துடன் நின்றாள். நல்ல உயரம் அவள். கம்பீரமான தோற்றம். கைகளில் அவள் பற்றியிருந்த சிறு குழந்தை தனக்கு ஒரு பாரமாயிருக்க முடியாதென்பது போல் அநாயாசமாய்ப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

''உன் வீட்டுக்காரர் சௌக்கியமா?'' என்று அவளை விசாரித்தாள் வேதம்.

''ம். அவரோடதான் இந்தப் பக்கமாய் ஷாப்பிங் வந்தேன். நேரமாகும் போல் இருந்தது. கைக் குழந்தையோடு கடை கடையாய் நிற்க வேணும்னுதான் அவர் முடிச்சண்டு வர வரைக்கும் இங்கே வந்து உக்காந்துண்டிருக்கேன்னு வந்துட்டேன்.''

''நல்ல காரியம் செய்தே. இப்படி உக்காரு. நம்ம பிரேமா தெரியுமோல்லியோ? ரொம்பக் கெட்டிக்காரி......''

இருவரையும் அறிமுகம் செய்து வைத்த வேதம், இருவரின் பெயர்களையும் சொல்லித் தன் ஜோலி என்பதோடு நிறுத்திக் கொண்டாள். பேச்சு நீளத் தொடர்ந்தது. மடியில் குழந்தையோடு உட்கார்ந்திருந்த ரோகிணியின் மேல் பிரேமாவின் கண்கள் உலவின. அந்தப் பார்வையையே பேச்சினிடை கவனித்தாள் வேதம். அதில் ஏக்கம் தெரிந்ததோ? குறையோடு பார்க்கிறாளோ? அந்த இருவரையும் மாறி மாறிப் பார்த்த வேதத்தின் முகத்தில் ஒருவித சுவாரஸ்யம் படர்ந்தது.

''குழந்தையைப் பக்கத்திலே விட்டுட்டு இந்தக் காப்பியை வாங்கிக் குடி ரோகிணி.''

உபசாரங்கள், சம்பாஷணைகள். ரோகிணி பேசும் போதெல்லாம் அவள் தலைப் பிச்சோடாவிலிருந்து மல்லிச் சரமொன்று கழுத்தருகில் தொங்கி உரசிக் கொண்டிருந்தது. காலையில் சூடிய பூப் போலும். அங்காங்கு சிவந்து வாடியிருந்தது. வியர்வையின் காரணமாய், நெற்றியில் பைசா அளவுக்குக் குங்குமப் பொட்டின் சுவடுதான் தெரிந்தது. மஞ்சளில் கட்டம் போட்ட நார்ப் பட்டுச் சேலை. சற்று வயது முதிர்ந்தவர்கள் உடுத்தக் கூடியதுதான். அவள் முகத்தில் தெரிந்த இளமைக்குக் கொஞ்சம் பொருத்தமில்லாமல் தான் இருந்தது.

பிரேமா அவளோடு சகஜமாகப் பேசிக் கொண்டிருந்தாள், ஏக்கமோ கூச்சமோ அற்ற அவளது இயல்பான கலகலப்பின் எளிமை ரோகிணியைக் கவர்ந்திருக்க வேண்டும். சிரித்து, நெருக்கபாவத்துடன் பேசினாள்.

இந்த இருவரையும் உன்னிப்பாக மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள் வேதம். அவள் கண்களில் சுவாரஸ்ய ஒளி விரிந்திருந்தது. திடீரென்று ஏதோ உந்தல். குரூரத் தன்மையின் நிழல் படிந்ததுதானோ? வார்த்தைகளைத் தூக்கிப் போடுவது போல் பேசி விட்டாள்.

''ஏன் ரோகிணி, பிரேமாவுக்கும் கிட்டத்தட்ட உன் வயசுதானே இருக்கும்?''

அடுத்த கணமே வேதம் தன்னையே கடிந்து கொள்பவள்போல் மௌனமானாள். இருவரின் அந்தரங்கத்தையும் தகர்த்து இரண்டு திறந்த உள்ளங்களை ஒன்றோடொன்று நிர்வாணமாய் எதிரெதிரே நிறுத்த வேண்டும் போல் இருந்த எழுச்சியை நொடிப் பொழுதில் அடக்கிக் கொண்டாள்.

### கிடைத்து விட்டார்கள்!

போலீஸ் குற்ற இலாக்கா பயங்கரக் குற்றவாளி ஒருவனைப் பிடிக்கப் பெரு முயற்சி எடுத்துக் கொண்டது. அவர்களுக்கு அவனுடைய புகைப்படங்களில் ஆறு கிடைத்தன. அவை வெவ்வேறு கோணங்களில் எடுக்கப்பட்டிருந்தன. அவற்றுக்குப் பிரதிகள் எடுத்து எல்லாப் போலீஸ் நிலையங்களுக்கும் அனுப்பி வைத்தார்கள்.

சில தினங்களுக்கெல்லாம் ஒரு போலீஸ் நிலையத்திலிருந்து தகவல் வந்தது: ''குறிப்பிட்டிருந்த ஆறு நபர்களில் நால்வர் கிடைத்து விட்டனர். மற்ற இருவரும் விரைவிலேயே கிடைத்து விடுவார்கள் என்று நம்புகிறோம்.''

## லாபமும் நஷ்டமும் !

எங்கள் பத்திரிகையில் விளம்பரம் செய்யுங்கள். எப்படிப் பார்த்தாலும் உங்களுக்கு நன்மை இருக்கிறது. உங்கள் வியாபாரம் நல்ல முறையில் நடந்து கொண்டிருந்தால் எங்கள் பத்திரிகையில் விளம்பரம் செய்து நீங்கள் மேலும் லாபத்தை அடையலாம். உங்கள் வியாபாரம் நஷ்டத்தில் இருந்தாலும் விளம்பரம் செய்து பார்ப்பதுதானே நல்லது?

— ஒரு பத்திரிகை விளம்பரம்

பிரேமாவின் கண்கள் பட்டென்று தாழ்ந்தன. பார்வை சின்னக் குழந்தையின் மேல் லயித்தது. ஆயினும் புன்னகை மறையவில்லை. அதன் மலர்ச்சியிலிருந்து எதையும் தெரிந்து கொள்ள முடியவில்லை.

ரோகிணியின் தலையும் கண நேரம் குனிந்தது. பிஞ்சு பிஞ்சாக நீண்டு இளமை கொழிக்கும் தன் விரல்களைப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தாள் அவள். அந்த விரல்கள் அவளைப் பரிகசிப்பது போல் தோன்றியது.

பிரேமாவும் பேசவில்லை. சலனமற்ற கையால் தலை மயிரைத் தடவிச் சரிப்படுத்திக் கொண்டாள். கேசம் முன்பு போல் மிருதுவாக இல்லை. கையில் உறுத்தும் முரட்டுத் தன்மை அதில் புதிதாக முளைவிட்டிருந்தது. நரைப்பதற்காக அப்படிக் கேசத்தின் தன்மை மாறும் என்று யாரோ எப்போதோ சொல்லியிருந்தது லேசாக நினைவில் எழுந்து மறைந்தது. யார் சொன்னதென்று ஞாபகம் வரவில்லை.

''இந்த வேலைப்பாடெல்லாம் ரொம்ப அழகாயிருக்கு'' என்றாள் ரோகிணி, அவள் பின்னியிருந்த பையையும், கூடையையும் பார்த்து. ''எனக்குக்கூட இதிலெல்லாம் ரொம்ப ஆசை.''

''ஆனால் நேரமிருக்காது.'' பிரேமா சாதாரணமாகவே சொன்னாள். வேதத்துக் குத்தான் சுரீரென்றது. ரோகிணி ஏதோ யோசனையில் ஆழ்ந்தாற் போல் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தாள். ''செய்யறதுக்குக் கஷ்டமான வேலையா?'' என்று விசாரித்தாள் பிறகு.

''கஷ்டம் ஒண்ணுமில்லை. கொஞ்சம் பொறுமை வேணும், அவ்வளவுதான். 'ஒய'ரை வச்சிண்டு முடிச்சு முடிச்சாய்ப் போடணுமில்லையா ?''

வாசற்புறம் மீண்டும் அரவம்.

''ரோகிணி!''

''இதோ வந்துட்டேன்!.... அவர் திரும்பி வந்துட்டாப்பலே இருக்கு மாமி. நான் கிளம்பட்டுமா?''

''இதோ ஒரு நிமிஷம் இரு. குங்குமம் கொண்டு வரேன்'' என்றவாறு அவசரமாய் உள்ளே சென்றாள் வேதம்.

''சொக்காயில் எம்பிராய்டரி போடற வேலை உங்களுக்குப் பிடிக்குமா?'' என்றாள் ரோகிணி, ஏதோ பேச வேண்டுமே என்று நினைத்த தோரணையில்.

''எனக்கு அது வராது. நீங்க செய்யறது உண்டா ?''

''ம். எப்பவாவது செய்வேன்.''

''அந்த மாதிரியெல்லாம் அழகாய்ப் பூட் போட்டு இதோ உங்க குழந்தைக்கு உடுத்தினால் நன்றாயிருக்கும்.''

ரோகிணி ஏதும் சொல்லவில்லை.

''உங்க குழந்தை ரொம்ப அழகு. இவன் பெயரென்ன?''

நிமிர்ந்து நோக்கிய ரோகிணியின் கண்கள் எதையும் மறைக்காத நட்புத் தன்மையில் விரிவது போல் வெகுளியாய் ஒளிர்ந்தன.

''அது என் பிள்ளையில்லை.''

''பின்னே?''

ரோகிணி ஒரு நிமிஷம் பல்லைக் கடித்துக் கொண்டாள். அலையாக வியர்வை எழுந்தது. முகம் சிவக்கச் சட்டென்று பேசினாள். இது என் பேரக் குழந்தை.''

''என்ன !'' — பிரேமாவின் கண்கள் பிதுங்கின.

''நம்ப முடியலையா? எல்லாருக்குமே அப்படித்தான். யார்தான் நம்புவா, முப்பத்தஞ்சு வயசில் பாட்டின்னு சொன்னால் ? எனக்குப் பதினேழு வயசில் பெண் பிறந்தது. அது அந்தக் காலம். என் பெண்ணுக்கும் அவள் அப்பா அவசரமாய்க் கல்யாணம் பண்ண, அவளுக்கும் பதினெட்டு வயசிலேயே குழந்தை பிறந்ததுதானே அதிசயம்!''

பிரேமாவுக்கு நா எழவில்லை.

''எனக்கு எத்தனை சங்கடமாய், வெட்கமாய், இருக்குத் தெரியுமா? நானானால் பேரன் எடுத்தாச்சு, இந்த நாளிலேயோ ஒவ்வொரு பெண் என் வயசில் கல்யாணம்கூடச் செஞ்சுக்காமல் இருக்கா. அந்தப் பெண்களையெல்லாம் நினைச்சா எனக்கு அத்தனை ஏக்கமாயிருக்கு, பொறாமையாயிருக்கு.''

பிரேமாவின் பார்வை அவள் கரங்களிலிருந்த குழந்தையின் மேல் தாழ்ந்து நிலைத்தது. உள்ளே உணர்ச்சியின் கொந்தளிப்பு, மேலும் கீழுமாய்த் துடித்த அவள் கழுத்து நரம்புகளிலே பிரதிபலித்தது. குங்குமச் சிமிழோடு உள்நிலைப்படியில் வந்த வேதம் பிரேமாவின் அத்தோற்றத்தைக் கண்டு வியப்பில் நின்று விட்டாள். பிரேமாவின் முகத்தில் சலனத்தின் சாயல் ! எப்போதும் காட்சியளிக்கும் சலனமற்ற அமைதி, வழக்கமான அந்தத் திருப்தி, இப்போது எங்கே ? இது நாள் வரை இருந்ததைவிட இன்று அதிக வலிமையுள்ள குலுக்கல் ஒன்று அவளை ஆட்டி விட்டது போல் தோன்றியது. அந்த ஆட்டலில், அவள் உள்ளத்தை மற்றவர்களின் பார்வையினின்று மறைத்து வைத்திருந்த திரைதான் பட்டென்று கழன்று விட்டதோ ? அவள் ரோகிணியைப் பார்த்து மெல்லிய குரலில் சொன்ன வார்த்தைகள் பச்சைத் தொனியாக, பாயும் சாட்டியாக, வேதத்தின் காதில் விழுந்தன.

''வருத்தப்படாதீர்கள் ரோகிணி! ஏக்கப் படாதீர்கள். நீங்கள்.... நீங்கள் அதிருஷ்டசாலி.''

# வளரும் விஞ்ஞானம்



விஞ்ஞான வளர்ச்சி காரணமாகப் புகைப்படக் காமிராக்கள் எவ்வளவோ முன்னேற்றம் கண்டுவிட்டன. இன்ன வெளிச்சத்துக்கு ஏற்ப, இந்த அளவுக்கு, இந்த வேகத்தில் 'லென்ஸ்' திறந்து மூடப்படலாம் என்பதைப் புகைப்படமெடுப்பவரின் அனுமானத்துக்கு விடாமல் தானாகவே இந்தக் காரியங்களைச் செய்யும் புதுமையான காமிராக்கள் வந்துள்ளன. அதேபோல் குறைந்த வெளிச்சத்திலும் நிறைந்த வெளிச்சத்திலும் மிகத் துல்லியமாகப் புகைப்படமெடுக்க வசதியாக விதம் விதமான பிலிம்களும் தயாரிக்கப்படுகின்றன. இதையெல்லாம் பார்க்கும் சிலர் புகைப்படமெடுப்பவரின் வேலை மிகவும் சுலபமாகி விட்டதென்று கூறுவதுடன் அவரது தொழிலை ஒரு கலை என்றே ஒப்புக்கொள்ளவும் மறுக்கின்றனர். ஆனால் என்னதான் புதுமைகள் தோன்றியிருந்தாலும் காமிராவின் ஷட்டரைத் திறந்து மூடச் செய்வது மனிதனுடைய விரல்தான். கலை ஆர்வமும் அசாதாரணமான திறமையும் அவனுக்கிருந்தாலன்றி மிக நவீனமான காமிராக்களைக் கையாண்டும் பயனில்லை. அதோடு, அதிநுட்பமான காமிராக்களை விஞ்ஞானி தயாரிக்கும் அதே நேரத்தில் அதைக் கையாள்பவனின் கலை நுணுக்கமும் அதிகரிக்கிறதே! படத்தைப் பாருங்கள். பார் விளையாட்டில் பெர்லினிலேயே மிகத் திறமைசாலி எனப் பெயர் பெற்ற ஹான்ஸி பெர்ன்ஸ்டாட் என்பவர் கடும் வேகத்தில் காற்றாடிபோல் சுழலும்போது அவரது மூன்று நிலைகளை ஒரே நெகடிவ் பிலிமில் ஹென்ரிக் வாண்டர் பெக் என்ற புகைப்படக் கலைஞர் படம் பிடித்தார். இந்த அரிய சாதனைக்காக உலகமே அவரைப் புகழ்கிறது!

★

பத்திரிகைகளில் மழை என்று போட்டிருந்தால் வெயில் கொளுத்துவதும் மழை இல்லை என்ற அறிவிப்பு இருந்தால் மின்னல் இடியுடன் கூடிய மழை கொட்டித் தீர்ப்பதும் நமக்குப் பழக்கமாகி விட்ட விஷயங்கள். ஆனால் வருங்காலத்தில் அம்மாதிரியெல்லாம் நம்மை மழை ஏமாற்ற முடியாது!



1960ல் அமெரிக்கர்கள் டைராஸ் என்ற பெயர் கொண்ட ஆறு செயற்கைச் சந்திரன்களை விண்வெளியில் சுற்றிவரச் செய்தனர். (படம்) இவற்றிலுள்ள கருவிகள் சீதோஷ்ண நிலையை அறிவிக்கும் ரேடியோ புகைப்படங்களைப் பூமியில் உள்ள விஞ்ஞானிகளுக்கு அனுப்பி வைத்தன. இதனால் அட்லாண்டிக்கில் வீசிய புயல்கள், ஜப்பானிலும் பிலிப்பைன்ஸிலும் வீசிய சூறாவளிகள் ஆகியவை பற்றி முன்கூட்டியே அறிந்துகொண்டு எச்சரிக்கையாக இருக்க முடிந்தது.

1963–64ல் நிம்பஸ் செயற்கைச் சந்திரன்களை விண்வெளியில் உலகைச் சுற்றி வருமாறு செலுத்தியிருக்கிறார்கள். இவற்றில் அணு சக்தியால் இயங்கும் கருவிகள் சீதோஷ்ண நிலை பற்றிய ரேடியோ புகைப்படங்களை எடுத்து அனுப்பும். அமெரிக்கர்கள் மட்டுமின்றி இந்தச் செயற்கைச் சந்திரன் எந்த எந்த நாடுகள் மீதாகப் பறக்கிறதோ அந்த நாட்டு விஞ்ஞானிகளெல்லாம் கூட சீதோஷ்ண நிலை பற்றித் தேவையான தகவல்களை அதனிடமிருந்து பெறலாம்.

★

''இந்தத் துக்கச் செய்தியை அவனிடம் இடுமென்று சொல்லி வைக்காதே. மனுஷனுக்கு 'ஹார்ட் வீக்'! இதைக் கேட்ட 'ஷாக்'கிலேயே செத்துப் போனாலும் போய்விடுவான்!'' என்று கூறுவதாகக் கதைகளில் எழுதுவதுண்டு; வாழ்க்கையிலும் நடப்பதுதான்.

ஆனால் ஒருவித இருதயநோய்க்குப் பலமான ஷாக் கொடுப்பது ரொம்ப நல்லது என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்! 'வெண்டிரிகுலர் பிப்ரில்லேஷன்' என்ற நோய் உள்ளவரின் இருதயத் தசைநார்கள் ஒன்றுடன் ஒன்று இணை சேர்ந்து ஒழுங்காக ஒரே சீராகச் சுருங்கி விரிந்து இயங்காமல் தனித்தனியே தன்னிச்சையாக அதிர்ந்து கொண்டிருக்கும். இந்நோய் உள்ளவர்கள் உயிர் பிழைப்பது கடினம்.

சமீபத்தில் அமெரிக்காவில் உள்ள வெஸ்டிங்ஹவுஸ் கார்ப்பரேஷன் கண்டுபிடித்துள்ள 31 பவுண்டு எடையுள்ள ஒரு கருவி இந்த நோயைக் குணப்படுத்தி விடுகிறது. இக்கருவி 2,200 வோல்ட் சக்தியுள்ள மின்சார அதிர்ச்சியை நோயுள்ள இதயத்துள் பாய்ச்சுகிறது! இந்த ஷாக் ஒரு வினாடியின் சிறு பகுதி நேரமே நீடிக்கப்படுகிறது!

# வழக்கறிஞர் வரிசை

ஒரு நண்பர் சார்பில் அவருக்காகப் பரிந்து வந்து மற்றொரு நண்பர் சற்றுத் தீவிரமாக வாதாடினால், 'இவர் பெரிய நார்ட்டன் துரை! பிரமாதமாக வக்காலத்து வாங்கிக் கொண்டு வந்து விட்டார்' என்று சொல்வது தமிழ் நாட்டில் வெகு நாளைய வழக்கமாகி விட்டது. இப்படி ஒரு மரபைத் தோற்றுவித்த எர்ட்லி நார்ட்டன் சென்னை உயர்நீதி மன்றத்தில் சென்ற நூற்றாண்டின் கடைசிக் கட்டங்களிலும் இந்த நூற்றாண்டின் ஆரம்பப் பகுதியிலும் வழக்கறிஞராகத் தொழில் புரிந்து தொழிலுக்கும் தமக்கும் புகழ் தேடிக் கொண்ட ஆங்கிலேய பாரிஸ்டராவார். பரம்பரையாக வழக்கறிஞர் தொழிலைப் பின்பற்றியவர் மாத்திரமல்ல! பரம்பரையாக பாரதத்தின் முன்னேற்றத்தில் அக்கறை காட்டியவருங்கூட. அவருடைய பெரிய பாட்டனார் அந்தக் காலத்தில் இந்திய சுப்ரீம் கோர்ட் நீதிபதியாக இருந்தார். அவருடைய தந்தை ஜான் நார்ட்டன் சென்னை உயர்நீதி மன்றத்திலேயே அட்வகேட் ஜெனரலாகப் பதவி வகித்துப் புகழ் பெற்றவர். 1870ம் ஆண்டில் இங்கிலாந்தில் பாரிஸ்டர் பரீட்சை பாஸ் செய்து தொழிலை ஆரம்பித்த எர்ட்லி நார்ட்டன் 1879ம் ஆண்டில் சென்னை உயர்நீதிமன்றத்தில் தம்மை ஒரு வழக்கறிஞராகப் பதிவு செய்துகொண்டார்.

நார்ட்டன் வந்து சேர்ந்த சில நாட்களிலேயே உயர்நீதிமன்றத்தின் பல பகுதிகளிலும் கலகலப்புத் தோன்றி விட்டது. சாதாரண வழக்காக இருந்தாலும் நார்ட்டன் பெயர் இணைக்கப்பட்டவுடன் அது விசேஷ முக்கியத்துவம் பெற்று விடும். அப்புறம் எல்லாப் பிரபல வழக்குகளுமே அவரைத் தேடி வர ஆரம்பித்தன.

குறுக்கு விசாரணை செய்வதில் அவர் நிபுணர். என்னதான் முன்னேற்பாடாகப் பாடம் படித்துக் கொண்டு வந்த சாட்சியாக இருந்தாலும், குறுக்கு விசாரணையில் தம் கட்சிக்காரனுக்குச் சாதகமான விஷயங்களை வரவழைத்து விடுவதில் திறமைசாலி. அவருக்கு, விஞ்ஞானம், மருத்துவம், பொறியியல் முதலிய எல்லாத் துறைகளிலுமே நல்ல பரிச்சயம் இருந்ததால், குறுக்கு விசாரணையில் அவரிடம் சிக்கிக் கொள்ளும் சாட்சிகள் அதிகக் கலக்கத்துக்கு உள்ளாவார்கள். வாதத்தைக் கோவைப்படுத்திச் சொல்வதிலோ, வழக்கின் சாரத்தை ஜூரிகளுக்கு விவரிப்பதிலோ அவர் கைதேர்ந்தவராகையால், அநேகமாக அவர் உதவியை நாடிய கட்சிக்காரர்கள் எல்லோருமே வழக்குகளில் வெற்றியை நிலைநாட்டியவர்களாகவே இருந்தார்கள்.

அவருடைய கட்சிக்காரர்களில் அநேகர் பெரிய ஜமீந்தார்கள், நிலச்சுவான்தார்கள், அவர் கையாண்ட வழக்குகளில் சுன்னிவாடி ஜமீன் வழக்கு, கோயமுத்தூர் போட்டோகிராபர் கொலை வழக்கு, கார்ஸ்டின் வழிப்பறி வழக்கு முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

1885ம் ஆண்டு. ரெவினியூ போர்ட் முதல் அங்கத்தினர் கார்ஸ்டின் ஐ. ஸி. எஸ். மதுரை மாவட்டம் பெரியகுளம் பகுதியில் சொந்த அலுவல்நிமித்தம் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். கார் வசதி தோன்றாத காலம். காளை மாடுகள் பூட்டப்பட்ட வண்டியில் முன்னிரவு நேரத்தில் தேவதானப்பட்டிக்கும் பெரியகுளத்துக்கும் இடையே போய்க் கொண்டிருக்கும்போது ஐந்தாறு நபர்களால் மூர்க்கமாகத் தாக்கப்பட்டு வழிப்பறிக்குள்ளானார். விரோதத்தின் காரணமாகப் போடிநாயக்கனூர் ஜமீந்தார் தம் ஆட்களை ஏவிவிட்டுக் கார்ஸ்டினைத் தாக்கச் சொன்னார் என்று வழக்கை சிருஷ்டித்து மதுரை மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் போலீஸ் வழக்கைத் தாக்கல் செய்தது. மாஜிஸ்டிரேட் வழக்கை மதுரை செஷன்ஸ் நீதிமன்றத்துக்கு அனுப்பினார். போடிநாயக்கனூர் ஜமீந்தார் சார்பில் ஆஜரானவர் நார்ட்டன். இந்த வழக்கைச் சென்னை உயர்நீதி மன்றத்துக்கு மாற்றச் செய்தார் அவர்.

இந்த வழக்கில் அவர் இரண்டு நாட்கள் தொடர்ந்து ஜூரிகளிடம் வழக்கை எடுத்து விளக்கிய விதம் உயர்நீதி மன்றத்தின் சரித்திரத்திலேயே பிரசித்தமானது. 'வழிப்பறி செய்வதற்கோ, தாக்குவதற்கோ எந்தவித அடிப்படை நோக்கமும் தம் கட்சிக்காரருக்கு இடையாது என்பது அவர் வாதம். மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் மதுரைக் கலெக்டர் க்ரோல் ஜமீன்தாரைத் தூண்டித் தமக்குப் பிடிக்காத கார்ஸ்டினைத் தாக்கச் செய்தார் என்று கூறப்பட்டது. ஆனால் அது பற்றி செஷன்ஸில் பேச்சோ மூச்சோ இல்லை. க்ரோல்மீது பழி வாங்குவதற்காக ஜமீந்தார் குற்றவாளியாகப் பலி கொடுக்கப்படவிருக்கிறார், உண்மையில் ஜமீன்தாரும் கார்ஸ்டினும் நண்பர்கள் என்ற முறையில் வாதாடி, 'இந்த வழிப்பறி ஒரு சர்வ சாதாரண பண ஆசையில் எழுந்த காரியம்' என்று முடித்தார். ஜூரிகள் அனைவரும் ஒருமுகமாக ஜமீன்தாரைக் குற்றவாளியில்லை என்று சொல்லி விட்டார்கள்.

எர்ட்லி நார்ட்டன்

போட்டோகிராபர் கொலை வழக்கில் காரோடு சேர்த்துக் கொளுத்தப்பட்ட ஆசாமியை அடையாளம் கண்டுபிடிக்க வண்ணான் குறியை மாத்திரம் சாதகமாக உபயோகிக்க முயற்சி செய்தது சர்க்கார் தரப்பு. குற்றம் சாட்டப்பட்டவருக்காக ஆஜரானவர் நார்ட்டன்.

'இறந்து போனதாகக் கருதப்படும் நபர் இந்த நேரத்தில்கூடப் பூரண ஆரோக்கியத்துடன் இதே கோர்ட்டில் வந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கலாம். இறந்தவர் யார் என்று நிச்சயமாக ருசுப்பிக்காதவரையில் குற்றவாளி என்று கருதப்படுபவருக்குத் தண்டனை வாங்கித் தர முயற்சி செய்வது நீதியாகாது' என்று வாதாடினார். வழக்கு கைவிடப்பட்டது.

அதே வாசாலகரான நார்ட்டனால் அர்பத்நாட் இன்ஸால்வென்ஸி வழக்கில் மாத்திரம் வெற்றி காண முடியவில்லை. அர்பத்நாட் பாங்கி மூழ்கிச் சென்னையில் பலர் தலையில் கையை வைத்து உட்கார்ந்தபோது வழக்கறிஞர் வி. கிருஷ்ணசாமி ஐயர் கடும் முயற்சி எடுத்து அர்பத்நாட் துரையின் இன்ஸால்வென்ஸி மனுவை ஆட்சேபித்து அவன் மோசக்காரன் என்று நிரூபித்து வாதாட முன்வந்தார். அந்த நாளையச் சம்பிரதாயப்படி இந்திய வக்கீல் இன்ஸால்வென்ஸி வழக்குகளில் ஆஜராக முடியாது. ஆனால் திரு வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் வக்கீல் என்ற முறையிலல்லாது, பாங்கியில் பணம் போட்டு ஏமாந்த பல 'டெபாசிட்டர்களின் பிரதிநிதி' என்ற முறையில் கோர்ட்டில் வாதாட அனுமதிக்கப்பட்டார். அர்பத்நாட் சார்பில் வாதாடியவர் நார்ட்டன். அவரால் அர்பத்நாட் சந்தர்ப்பவசத்தால் இன்ஸால்வென்ட் ஆனவர் என்று நிரூபிக்க முடியவில்லை. பிரதம நீதிபதி ஆர்னல்ட் வைட், கிருஷ்ணசாமி ஐயரின் வாதங்களை ஏற்று அர்பத்நாட்டுக்குப் பதினெட்டு மாத தண்டனை விதித்தார்.

நார்ட்டன் ஆங்கில ஃபிரெஞ்சு இலக்கியங்களில் நன்கு பரிச்சயமுள்ளவர். நல்ல சம்பாஷணையாளர். நகைச்சுவை நிறைந்தவர். அஞ்சா நெஞ்சம் படைத்தவர்.

உயர்நீதி மன்றத்தில் ஒரு பெரிய அப்பீல் வழக்கு. சுமார் மூன்று வார காலம் வரை அது எடுத்துக்கொள்ளும் என்று எதிர்பார்க்கப்பட்டது. விசாரணை நீதிபதிகள் சர் டி. முத்துசாமி ஐயர், பார்க்கர் இன்னும் மற்றொரு ஐ.ஸி.எஸ். காரர். ஒரு திங்கட்கிழமை காலை வழக்கு எடுத்துக் கொள்ளப்படுவதாக அறிவிக்கப்பட்டிருந்தது. அன்று காலையில் கோர்ட் கூடிவிட்டது. நீதிபதிகள் கம்பீரமாகப் பவனி வந்து ஆசனங்களில் அமர்ந்துவிட்டார்கள். பெஞ்சு கிளார்க் வழக்கு எடுத்துக்கொள்ளப்பட்டதாக அறிவித்தார்.

நார்ட்டன் நிதானமாக எழுந்திருந்தார். ''நீதிபதி அவர்களே, அப்பீல்தாரரான என் கட்சிக்காரர் காலமாகிவிட்டதால் இந்தக் கேஸை மேற்கொண்டு நடத்துவதற்கில்லை' என்றார். சர் டி. முத்துசாமி ஐயர் உடனே ''மிஸ்டர் நார்ட்டன்! உங்கள் கட்சிக்காரர் காலமாகிவிட்டார் என்று சுலபமாகச் சொல்லி விட்டீர்! நீதிபதிகள் இந்த வழக்குக்காக எவ்வளவு தூரம் சிரமப்பட்டு வழக்கு விவரங்களையும், சட்டங்களையும் புரட்டிப் படித்திருக்கிறார்களென்று உங்களுக்குத் தெரியுமா?'' என்றார்.

'கனம் நீதிபதி அவர்களே! நான் நிஜமாகவே வருத்தப்படுகிறேன். தாம் சாகப் போவதாக என் கட்சிக்காரர் முன்கூட்டியே சொல்லவில்லை. அவர் காலமாவதற்கு முன் கேட்டிருந்தாரானால் கனம் நீதிபதிகளுக்குத் தொந்தரவு கொடுக்காமல் இன்னும் மூன்று வார காலம் பொறுத்திருந்து சாகச் சொல்லியிருப்பேன்'' என்றார் நார்ட்டன். கோர்ட்டே சிரிப்பு வெள்ளத்தில் மூழ்கியது; நீதிபதிகள் உட்படத்தான்!

மற்றொரு நீதிபதி ஜெர்மானிய நீதித்துறை நிபுணர் ஸாவிக்னி என்பவரிடமிருந்து அடிக்கடி மேற்கோள்களை எடுத்துச் சொல்ல ஆசைப்படுவார். ரோமன் சட்டங்களில் தாம் ஒரு நிபுணர் என்று தம்பட்டம் அடித்துக்கொள்பவரும்கூட. உண்மையில் அவருக்கு ஜெர்மானிய பாஷையோ லத்தீனோ கொஞ்சமும் தெரியாது.

இந்த நீதிபதிக்கு நார்ட்டன் ஒரு பாடம் கற்பிக்க விரும்பினார். தாம் வாதாடும் வழக்கின் நடுவில் ஸாவிக்னி அப்படிச் சொல்கிறார், இப்படிச் சொல்கிறார் என்று ஆங்கிலமல்லாத வேறு மொழியில் பிரமாதமாக இடையிடையே கலந்து விளாசினார். நீதிபதியும் அதை ஆமோதிப்பது போல் 'எஸ்', 'எஸ்' என்று தலையை ஆட்டினார். ஆனால் நார்ட்டன் சொன்ன பகுதிகளோ ஒரு பிரெஞ்சு மொழி நாடோடிப் பாடலின் பகுதிகள். பாவம்! நீதிபதி தம் போலிப் பெருமைக்கே பலியானார்.

நார்ட்டன் ஒரு சிறந்த மேடைப் பிரசங்கி. எந்தத் துறையிலும் பிரகாசிக்கக் கூடிய சாமர்த்தியம் வாய்ந்தவர். ஒரு சமயம் இந்திய தேசிய காங்கிரஸ் கூட்டத்தின் வரவேற்புக் குழுத் தலைவராகவும் பணியாற்றியிருக்கிறார். அவரிடம் வேலை பயின்ற ஆல்பர்ன் பிற்காலத்தில் அவருக்கு எதிராகப் பல வழக்குகளில் அட்வகேட்-ஜெனரலாக ஆஜராகியிருக்கிறார். கடைசி நாட்களில் நார்ட்டன் கல்கத்தா உயர்நீதி மன்றத்திலும் வழக்கறிஞராகப் பணியாற்றினார். ஆனாலும் அவருடைய பழைய கட்சிக்காரர்களுக்காக அவர் சென்னைக்கு வந்து போய்க்கொண்டுதானிருந்தார்.

இப்படிப் புகழ்பெற்ற ஏர்ட்லி நார்ட்டனின் வண்ண ஓவியத்தைச் சென்னை உயர்நீதி மன்றக் கட்டிடத்தில் பிறகு ஒரு சமயம் திறந்து வைத்த பிரதம நீதிபதி சுவுட்ஸ்டிராட்டர் 'நார்ட்டனுடன் பத்து நிமிடங்கள் பேசுவதற்கு முன்பே ஒரு சிறந்த அறிவாளி முன் நிற்கிறோம் என்ற எண்ணம் பேசுபவருக்குத் தோன்றிவிடும். சுருக்கமாகச் சொன்னால் நார்ட்டனை இந்தத் தேசத்தவர் அந்தத் தேசத்தவர் என்று பிரித்துக் காட்ட முடியாது. அவர் ஓர் அகில உலக கனவான்' என்று குறிப்பிட்டார்!

தகுதியான புகழ்மாலைதான்.

**— கோமதி சுவாமிநாதன்**




திருமலையிலிருந்து பஸ் இறங்கிக்கொண்டிருந்தது. பனிக் காற்றின் சில்லிப்பு முகத்தை வெளிக்காட்ட விடவில்லை.

சுந்தரம் சுரத்தில்லாமல் உட்கார்ந்திருந்தான். பரிமளம் பிள்ளையின் மழுக்கைத் தலையை மார்பிடுக்கில் பொருத்தி அணைத்தபடியே குளிர்ந்த காற்றையும் வெளிக்காட்சிகளையும் ரசித்துக் கொண்டிருந்தாள். பரம திருப்தி அவளுக்கு. சுந்தரத்துக்கு அவளைப் பார்க்கப் பொறாமையாகக் கூட இருந்தது.

சரிவுப் பாதையில் வளைந்து வளைந்து இலகுவாகப் பஸ் இறங்கிக்கொண்டிருந்தது. 'இறக்கத்தில் இருக்கும் சுலபம் ஏற்றத்துக்கு எங்குமே ஏற்படுவதில்லை' — இப்படி நினைத்த பிறகுதான் உணர்வு வந்தது சுந்தரத்துக்கு. 'இது எனக்கும் பொருந்தும்' என்று.

வருஷக்கணக்காகக் கோடித்து, இப்போது இருப்பதிப் பயணம் பிராப்தமாகியிருக்கிறது. பரிமளத்தைப் போல் சுந்தரத்துக்கும் இருந்திருக்க வேண்டிய மனநிறைவை அங்கே வேங்கடியின் எதிர்பாராத சந்திப்பு குலைத்து விட்டது.

''என்ன யோசனை பலமாக இருக்கிறது?''

''ம்ஹ்க!''

''சலித்துக்கொள்ளும்படி என்ன இப்போது? திவ்வியமான பெருமாள் சேவை! மூணு தடவை போய் மனசு நிறையச் சேவித்துக் கொண்டாயிற்று. இவ்வளவு சிறப்பாய் எல்லாம் கிடைக்குமென்று எதிர்பார்க்கவில்லை.''

''சரி, சரி!''

காற்றின் இறுக்கம் காதுகளை இலேசாக அடைத்திருந்தும், பரிமளத்தின் பேச்சு சுந்தரத்துக்குக் கேட்கத்தான் செய்தது. குளிரையும் சகித்துக் கொண்டு, வெளிப் பக்கம் பார்வையைத் திருப்பினான். பரிமளத்துக்கு இது பற்றி அக்கறை இல்லை.

''சாப்பாடு வசதிக்கென்று ஒரு நல்ல மனுஷர் கிடைத்தாரே, அதைச் சொல்லுங்கள். சத்திரம், சாவடி, அறை, கிளப்பு என்று லோலாயப்படாமல், நமக்குப் பாந்தமாய் மடத்திலே இடம் கிடைத்ததே; எல்லாம் இந்த 'ரங்க ராக்ஷஸன்' அதிர்ஷ்டம்தான்.''

மூணு வயதுப் பிள்ளை, மழுக்கைத் தலையைத் தாயின் மார்பிலிருந்து தூக்கி அப்பாவைப் பார்த்துச் சிரித்தான். சுந்தரத்துக்கும் பொலிவு விரிந்தது. பையனின் பக்கம் கை நீட்டி, ''ஏலே! குளுர்றதாடா? எங்கிட்டே வறியா?'' — அழைத்தான். தலையசைத்தபடியே தாயிடம் முகத்தைப் புதைத்துக் கொண்டான், கட்டிப் பயல்.

''ஏன்னு! அந்த மடத்துப் பரிசாரகர் முதலிலே யாரோ மூணும் மனுஷர் மாதிரி இருந்தவர். அப்புறம் நம்மிடத்திலே எவ்வளவு பரிவாய் இருந்தார், பார்த்தீர்களா? 'ராஜூ, ராஜூ!'ன்னு இவனை அவரும், அவர் அகத்துக்காரியும் கொஞ்சின கொஞ்சல்! அவரைவிட அவளிடத்திலேதான் இந்தப் பயலுக்கு ஜாஸ்தி ஒட்டுதல்.''

''போறுமே, உன் தொணதொணப்பு: வாயை மூடிக் கொண்டு இரேன்!'' — கடிந்து கொண்டுவிட்டு, முகத்தை வெளிப்பக்கம் திருப்பிக் கொண்டான் சுந்தரம். கலைத்து விடப்பட்ட தேனீக் கூட்டம், தன் தேனடையையே திரும்ப மொய்த்துக் கொள்வது போல் சுந்தரத்தின் எண்ணங்கள் வேங்கடியிடம் வந்து சேர்ந்தன.

பிறரைத் துன்பப்படுத்தாத சுயநலமும், அந்தச் சுயநலத்தின் பிடிமானமில்லாத பிழைப்பும் எங்காவது இருக்க முடியுமா? சுந்தரம் தன்னையே உலகெங்கும் பார்த்தான்.

'அவரைவிட அவளிடத்தில்தான் இந்தப் பயலுக்கு ஜாஸ்தி ஒட்டுதல்.'

இருக்கக் கூடாதா? மனத் தத்துவம் உணர்ச்சிகளின் செல்வாக்கை ஏற்பதென்பது சகஜம்தானே?

''நானும் கொடுத்து வைத்தவனாக இருந்திருந்தால் இவருக்கே வாழ்க்கைப்பட்டு இவர் குழந்தைகளுக்குத் தாயாகியிருக்க வேண்டியவள்தானே?'' — வேங்கடி மருகி, உள்ளக் குரலில் சொல்லிக் கொண்டிருக்க மாட்டாளா?

அல்லது ஒருவேளை,

''இந்த அல்பப் பயலுக்கு இப்படியொரு படுசுட்டியாக ஒரு பிள்ளை பிறந்திருக்கிறதே! பாத்திரமறியாமல் இட்டுவிட்டதாகப் பரமனையே ஏசி இருக்கலாமோ? தரும், தரும்!''

முதலில், மடத்துப் பரிசாரகர் கோபாலாச்சாரியின் வரவேற்பில் சுந்தரம் கண்ட உண்மை, 'க்ஷேத்திர முதலைகள்' எங்குமே இப்படித்தான். அவர்கள் பிழைப்பு இது, என்பதுதான்.

மடம் விஸ்தாரமாக இருந்தது. உள்ளே அழைத்துச் சென்ற கோபாலாச்சாரி, வெந்நீர், சாப்பாடு, பால், தங்குவதற்கு வாடகை சகலத்துக்கும் கணக்குப் போட்டுக் கொடுத்து விட்டு, ''ஸார்! பெரிய மனசு பண்ணி இந்த ஏழை சம்சாரிக்கென்று ஏதாவது தனியாகக் கொடுக்க வேணும். உங்களைப் போல் வந்து போகிற சேவார்த்திகளை நம்பி ஜீவிக்கிற குடும்பம்'' என்று சொல்லி வைத்தார். முன் சொன்ன செலவுத் தொகையும் அவருக்குத்தான் சேரும் என்பது சுந்தரத்துக்கு முதலில் தெரியவில்லை.

''அதுக்கென்ன? பார்க்கலாம்'' என்று மழுப்பலாகப் பதில் சொல்லி வைத்தான்.

சுந்தரம் ஊர் திரும்பும்போது இரட்டிப்புத் தொகையைக் கொடுத்ததும், ''அதெல்லாம் ஒண்ணுமே வேண்டாம் ஸ்வாமி! குழந்தைக்கு எங்கள் பேரிலே உண்டான ஒட்டுதலுக்கு நாங்கள் எவ்வளவு செய்தாலும் போதாது. ராஜாப் பயல்! எம்பெருமான் அநுக்ரகத்தாலே க்ஷேமமா யிருக்கவேணும்!'' என்று சொல்லி ராஜுவைத் தூக்கி அணைத்து முத்தமிட்டுவிட்டு, பணத்தை நீட்டிய கையை மடக்கிவிட்ட தன்மை சுந்தரத்தைத் தழுதழுக்க வைத்தது. எவ்வளவு வற்புறுத்தியும் அவர் பணத்தை வாங்கிக் கொள்ளவில்லை. சுந்தரம் வேறு வழி செய்தான்.

இருபது ரூபாயையும் ராஜுவுக்குப் போட்டிருந்த புதுச் சட்டைகளையும் பரிமளத்தின் மூலமாகக் கோபாலாச்சாரியின் மனைவியிடம்—வேங்கடியிடம் சேர்ப்பித்துவிட்டான். அந்த நினைவு அவனுக்குக் கொஞ்சம் மகிழ்வைத் தந்தது.

வேங்கடி அதை வாங்கிக் கொண்டதைக் கோபாலாச்சாரி அறிந்தால், அவளைக் கடிந்துகொள்வார். எனக்காக — சை! — எங்களுக்காக அவள் அந்த 'ஏசலைப் பொறுத்துக் கொள்ளுவாள். ஊர் போய்ச் சேர்ந்ததும், கோபாலாச்சாரிக்கு மன்னிப்புக் கோரி ஒரு கடிதம் போட வேண்டும். அதை அவளும் படிப்பாள். கொஞ்சம் ஆறுதல் பெறுவாள்.: என்ன? வேங்கடிக்கு ஆறுதலா?...

கிளர்ந்த மகிழ்வு குலைந்தது. சுந்தரம் கண்களை மூடிக்கொண்டு சாய்ந்து அமர்ந்தான். தூங்குவதாகப் பிறர் நினைத்துக் கொள்ளட்டுமே! பஸ் ஓடிக்கொண்டிருந்தது.

**வே**ங்கடியை முதலில் சுந்தரம் சந்தித்தது தஞ்சையில். அவள் கொழுகொம்பைப் பற்றிப் படரக் காத்திருக்கும் தளதளப்பான இளங்கொடி; இவன் கல்லூரியை முடித்துக் கொண்டு மேலே புதுப் படிப்பா, உத்தியோகமா என்று குழம்பிக் கொண்டிருந்த சமயம்; நெருங்கிய உறவு, ஆனால் விட்டுப் போன உறவு என்ற அறிமுகத்தோடு சந்தித்த நேசமான சந்திப்பு அது. அதற்கு முன்பு ஓரிரு வருஷங்களாக நண்பன் வீட்டுக்கு எதிர்வீட்டுப் பெண் என்கிற ஹோதாவில் கனிவாகக் கண்டு கொண்டதுண்டு. பாந்தமான மேனிப் பூரிப்பும், பெண்மைக்குப் பெருமை தரும் அழகுக் கவர்ச்சியும் கூடிய யுவதியை ஆண்கள் கவனிப்பது—அதாவது பார்வையால் ரசிப்பது உலகாயத மரபு இல்லையா?

ஒரு நாள் சுந்தரத்தை எதிர்வீட்டில் சந்தித்த கோதை அம்மாள், ''நீ ரங்கசாமி பிள்ளையில்லே? என்னை ஞாபகம் இருக்காடா? அத்தங்கா, அத்தங்கான்னு என் இடுப்பிலே ஏறி உட்கார்ந்துகொண்டு கோவில் மணியை அடிக்கப் பக்கத்திலே போய் நிற்கச் சொல்லுவியே! நாடாளன் சன்னிதித் தெருவிலே, கோவிலுக்குப் பக்கத்து வீட்டிலே இருந்தாரே அந்த அத்திம்பேர் ஞாபகமில்லையா உனக்கு?'' என்று சொல்லி மறந்திருந்த உறவுக்கு மெருகு கொடுத்தாள்.

எல்லாம் நினைவு வந்தன சுந்தரத்துக்கு: அவன் அதில் கலந்தான்.

''உன்னுடைய பாட்டி பேச்சைக் கேட்டுக்கொண்டு, என் மாமா — அதுதான், உன் தாத்தா — எங்கள் உறவே வேண்டாம்னு இருந்திட்டார். இருந்தாலும் அவர் எங்களுக்குச் செய்திருக்கிறதும், எங்களை வளர்த்திருக்கிறதும் மறந்துவிட முடியுமா? கொஞ்சநஞ்சமாகவா எங்களிடத்திலே பிரியம் வைத்திருந்தார்! எல்லாம் பொம்மனாட்டி அடவு இல்லேன்னு குட்டிச்சுவர்தான். நீ குழந்தை; உனக்கு ஏதுக்கு அந்த வம்பு—வர்மமெல்லாம்? உன் அப்பா எங்களோடேயே ஓடியாடி வளர்ந்தவன்தான். அம்மாக்காரி பேச்சைக் கேட்டு அவனும் ஏதோ சொத்தை அபகரித்துக் கொண்ட பங்காளி மாதிரி எங்களை ஒதுக்கினான். ஆனால் இப்போது எல்லாம் படிமானம்தான். சம்சாரியாகிவிட்டானில்லையா? பேச்சு வார்த்தை, போக்குவரத்து இல்லாவிட்டாலும் நான் உங்களைப்பற்றியெல்லாம் அறிந்தவள் — தெரிந்தவர்களிடத்திலே விசாரித்துக்கொண்டுதான் இருக்கிறேன். சரி, வீட்டுக்கு வா! வேங்கடிதான் சொன்னாள், 'அம்மா! எதிர்வீட்டுக்கு வந்து போகிற பிள்ளையைப் பார்த்தால், நம் மாமா தாத்தா பிள்ளை ரங்கசாமியின் ஜாடையாக இருக்கிறதே!' என்று. நான் பார்த்தேன்; விசாரித்தேன். அப்புறம்தான் தெரிந்தது. 'நான் எடுத்து வளர்த்த குழந்தைதாண்டி இவன்' என்று சொன்னேன். சரி, நீ வீட்டுக்கு வா!''

இப்படி அறிமுகமும் தொடர்பும் ஏற்பட்டன.

அப்பாவும் ஆட்சேபிக்கவில்லை. ''ஏதோ அந்தக் காலத்திலே சண்டை; உன் பேரிலே பிரியமாக இருக்கிறதாக எழுதுகிறாய்; கூப்பிட்டால் போய் வாயேன்'' என்று எழுதியிருந்தார். எங்கள் குடும்பம் தஞ்சையிலிருந்து நூறு மைல் தெற்கே ஒரு கிராமத்தில் இருந்தது. நான் கும்பகோணத்திலிருந்து அடிக்கடி தஞ்சை போய் வருவேன். நண்பன் ஜவுளி வியாபாரி; சங்கீதம், கதா காலட்சேபம், பஜனைக் கீர்த்தனம் ஆகியவைகளில் அதிக மோகம் அவனுக்கு. நானும் அவன் வழிதான்.

நான் இளம் எழுத்தாளன் என்பதை அறிந்தபோது வேங்கடிக்கு அசாத்தியப் பிரமிப்பு. பரிவுக்கு மேலும் நெருக்கம் ஏற்பட்டது: அவளுக்கும் கதை எழுத ஆசையாம்; நிறைய எழுதி எழுதி வைத்திருக்கிறாளாம். என் கதைகள் சகலத்தையும் படித்து மகிழ வேண்டுமாம். எனக்கு நல்ல வருங்காலம் இருக்கிறதாம். அவளுக்குச்


















# ஒரே ஒரு ஸாரிடான்

'ரோஷ்'

## வலிகளையும் நோவுகளையும் போக்கும்!

**வலியைப் போக்குகிறது. ஆசுவாசப்படுத்துகிறது. புத்துணர்ச்சி யூட்டுகிறது**

உலகப் புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான் துரிதமாக, கெடுதல் எதுவுமின்றி, நிச்சயமாக வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடம்புவலி, ஜுரம் வரும்போலிருப்பது, ஜலதோஷம் இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். பெரியவர்களுக்கு ஒரு வில்லை முழு டோஸ்; குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.







ஸாரிடான் ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 நயா பைசா

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

சரியாக எழுத வரவில்லையாம். அவன் எழுதிய வைகளை நான் படித்துப் பார்த்து, சரிப் படுத்திக் கொடுக்க வேண்டுமாம்; கேலி செய் யக்கூடாதாம்.

தாயும் அவனும் சேர்ந்திருக்கிறபோதுதான் நாங்கள் நேருக்கு நேர் பேசிக்கொள்வோம். அதுவும் சில வார்த்தைகளில், சிறிது நேரம். தனிமையில் சந்திப்பது அபூர்வம். சந்தித் தாலும் எனக்கு அங்கே இருக்கக் கூச்சம்; பேசுவதற்கும் அப்படித்தான். நானே இப் படி இருக்கிறபோது, அவள் நாணப்படக் கேட்பானேன்? படித்திருந்தாலும் வேங்கடி அந்தக் காலத்துப் பெண்தான்!

கதையில் எழுதிப் 'பிழைத்து' வரு கிறேனே, அந்தக் 'காதல்' இதுதானோ என்று என் மன நிலையை ஆராய்ந்துகொண்ட துண்டு. அப்போது, அது நிஜமான — சகஜ மான சுவர்க்க சுகானுபவம் என்கிற கற்பனை நம்பிக்கை வடிவத்தில் உணர்வுகளிலெல்லாம் வியாபித்திருந்தது.

நானாகவே வேங்கடியின் தாயிடம், ''உன் பெண்ணை நான் கல்யாணம் செய்துகொண் டால், நம் இரு குடும்பங்களும் முன் போலவே ஒற்றுமையாகப் போய் விடும். என்ன சொல்கிறாய்?'' என்று நேருக்கு நேர் சொல்லாத குறைதான். என் போக்கு, பரிவு, பேச்சின் தொனி எல்லாமே அந்தக் கருத்தை அவர்களுக்கு உணர்த்தியிருக்கும்—குறிப்பாக வேங்கடிக்கு!

என் நண்பன் மூலமாக வேங்கடியின் ஜாதகத்தை வாங்கி அப்பாவுக்கு அனுப்பச் செய்தேன். ''அங்காரக தோஷம், துளிக்கூடப் பொருத்தமில்லை'' என்று பதில் வந்தது. உள்ளூர் ஜோசியர் ஒருவர், ''பேஷாகச் செய்யலாம், பொருத்தம் இருக்கிறது'' என்று அனுமதித்தார். இதை வைத்துக் கொண்டு அப்பாவை எதிர்க்க முற்பட்டேன். இடம் இன்னது என்று தெரிந்ததும், குடும்பம் முழுதும் எனக்கு எதிராகத் தாக்குதல் தொடங்கியது.

''ஊரெல்லாம் கடன் வாங்கி நம்பிக்கைத் துரோகம் செய்தவன் பெண்ணையா கல் யாணம் செய்துகொள்ளுகிறது?'' -அண்ணன் கண்டித்தான்.

''சாவு — வாழ்வுக்குக்கூட உறவு அற்றுப் போன இடத்தில் சம்பந்தம் செய்வாளா யாராவது? புத்தி போகிறதே!'' — அம்மா ஆர்ப்பரித்தாள்.

''அவ்வளவு ஆசையா? நீயே நிச்சயப் படுத்தியாச்சா? அடி சக்கை! சரி, நானைப் பாரு, கல்யாணத்தை ஜாம் ஜாம்னு நடத் திக்கோ! பத்திரிகை, புரோகிதர், மேளம் எல்லாம் உண்டோ? இல்லாவிட்டாலும் பரவாயில்லே. நான் சாப்பாட்டுக்கு வந்து சேர்ந்துடறேன்.'' — இது அப்பாவின் பதில்.

அப்போதுதான் உணர்ந்தேன். ஆசைப் படுவது குற்றமில்லை; ஆசைப்பட்டபடியே நடத்திக்கொள்ள வேண்டும், அல்லது அந்த ஆசையெல்லாம் அப்படியே பலித்தாக வேண்டும் என்று எதிர்பார்ப்பதுதான் மகா குற்றம் என்பதை. எந்தக் கஷ்ட நஷ்டங் களையும் தாங்கத் தயாராகி, ஆசையை நிறைவேற்றிக்கொள்ளும் துணிவு இல்லாத சுய பலவீனத்தை ஒப்புக்கொள்ளாமல், பிற




''எங்க வீட்டுக்கு விருந்தாளிங்க வந்திருக்காங்க.''

''ஓ! சோபா செட் வாடகைக்கு வேணுமோ?''

''ஊகும்! அவற்றிலிருக்கும் மூட் டைப் பூச்சிகளை மட்டும் வாடகைக் குக் கொடுத்தால் போதும்!''

ரைக் குறை கூறிக் கொண்டு நான் பின் வாங்கினேன். இந்த 'நரிப் பாய்ச்சல்' சூரத் தனத்துக்கு வேங்கடியை வீணுக்கு ஆசை காட்டி அல்லல்படுத்தியிருக்க வேண்டாம். உணர்ச்சிகளை அமர்த்தி அநுபவிக்கும் வாய்ப் பும் இல்லாமல் பரிதவிக்கும் பேதை இனத் துக்கு ஆண் இனம் இப்படிக் கொடுமைக் கருவியாக அமைய வேண்டாம்!

சுந்தரத்தின் சுய உணர்வு தன்னிலைக்கு வந்தது.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது.

பத்து வருஷங்களுக்குப் பிறகு வேங் கடியைத் திருப்பதியில் இப்படிச் சந்திப் போம் என்று சுந்தரம் எதிர்பார்த்திருக்க முடியுமா? வசதி இல்லாத குறையால், ஆந்திராவில் ஒரு நடுத்தர வயதுக்காரருக்கு இரண்டாந் தாரமாக அவள் வாழ்க்கைப் பட்டதும், அவர் மளிகைக் கடை வைத்து வசதியாக இருப்பதாகப் பெண்ணைப் பெற்ற வள் திருப்திப்பட்டுக் கொண்டதும் பழைய செவிவழிச் செய்திகள்.

மேல் வரும்படிக்கென்று சுந்தரம் பல தரங்களிலும் பல ரகப் பத்திரிகைகளுக்கும் எழுதித் 'தொழில்' நடத்தி வரும்போது, அடிக்கடி ஒரு நினைவு அவன் நெஞ்சை நெருஞ்சி முள் மாதிரி தைத்துக் கொண்டிருக்கும். 'எழுதிப் பிழைப்பது' என்பதற்கு 'எழுத்தால் பிழை செய்வது' என்று ஒரு பொருளும் உண்டு. காதல், தியாகம், தூய அன்பு, இலட்சியம், பண்பாடு என்னும் பல மூலப் பொருள்களை வைத்துக்கொண்டு இந்த எழுத்தாளன் எப்படியெல்லாம் பிழைக்கிறான்!

அறிமுகமான புதிதில், வேங்கடி தான் எழு திய கதை ஒன்றைச் சுந்தரத்துக்கு அனுப்பி

வைத்திருந்தான்: கவருக்கு மேல் 'பிழை' என்று அவையடக்கமாக எழுதியிருந்தாள். முதிர்ச்சி பெறாத, பிறர் செல்வாக்கில் அடியொற்றி எழுதும் உற்சாக எழுத்தாளியின் படைப்பு அது. சொந்த மனநிலை, உள்ளக் கிடக்கை, ஆசாபாசம் ஆகியவைகளின் பிரதிபலிப்பும் ஓரளவு அதில் இருந்தது. கதை இதுதான்: பெற்றவர்களை இழந்த ஒரு பையனை அவன் அத்தை எடுத்து வளர்க்கிறாள். தன் நகை நட்டுக்களையெல்லாம் விற்று அவனைப் படிக்க வைக்கிறாள். எஞ்சியிருக்கும் ஒரு வீட்டையும் அடமானம் வைத்து அவனை டாக்டருக்குப் படிக்க வைக்கிறாள். டாக்டரானதும் அத்தையின் மகளை மணந்து கொள்ளுகிறேன் என்று வாக்குக் கொடுத்தவன், சொல் தவறி, வேறொரு டாக்டர் குமரியைக் கல்யாணம் செய்து கொண்டு விடுகிறான். காரணம், அத்தை பெண்ணை விட அந்தக் குமரி பணக்காரி, அழகி, அதிகம் படித்தவள்.

கதையின் முடிவில் ஆண் இனத்தின் துரோக குணத்தை, 'தருமா, தர்மமா?' என்றெல்லாம் கேள்வி கேட்டுக் கண்டித்திருந்தாள் வேங்கடி.

கதையை உறைக்குள் போட்டதும், முகவரிக்கு மேல் இருந்த 'பிழை'க்குப் பக்கத்தில் 'ப்பு' சேர்த்தான் சுந்தரம். ஏதோ தோன்றியது சேர்த்து விட்டான். கதை எழுதுவது பிழைப்பு; அல்லது அந்த டாக்டர் பையன் செய்தது பிழைப்பு; இல்லாவிட்டால், ஆண் இனம் செய்வதெல்லாமே 'பிழைப்பு'தான் — இவைகளுள் எந்தப் பொருளைக் கொண்டானோ? வேங்கடி என்ன பொருள் கொண்டாளோ? அந்தச் சொல்லுக்கு உள்ள உட்பொருளையும் அவள் உணர்ந்திருப்பாளோ ?

**ப**ஸ் கீழ்த் திருப்பதிக்கு வந்து சேர்ந்தது.

சுந்தரத்துக்கு உடனே ஊர் திரும்ப வேண்டும் போல் இருந்தது. பரிமளத்தின் திருப்தியும், உற்சாகமுமே அவனைச் சித்திரவதை செய்து கொண்டிருந்தன. அலர்மேலு மங்காபுரம் போய் வந்தார்கள்.

''நாழிகை ஆகிறது. ராமானுஜபுரத்துக்குப் போய்க் கோவிந்தராஜப் பெருமாளைச் சேவித்துவிட்டு வரவேண்டும், கிளம்புங்கள்!'' என்று ஊக்கினாள்.

சுந்தரம் சென்னை அரசாங்க பஸ்ஸுக்கு டிக்கட் வாங்க அதன் அலுவலகத்துள் புகுந்தான். ஜட்கா வண்டியில் தாயையும் மகனையும் உட்கார்த்தி வைத்துவிட்டு அவன் டிக்கெட் கொடுக்கும் அறைக்குள் காத்திருந்தான். வண்டிக்காரன், ''டிக்கட்டு போடுவதற்குள்ளே கோவிலுக்குப் போய் வந்து விடலாம். பன்னிரண்டு மணிக்குக் கதவைச் சாத்திவிடுவாங்க. அம்மா கூப்பிடுறாங்க உங்களை'' என்று பல முறை வந்து அழைத்தான். சுந்தரம் வேண்டுமென்றே நகரவில்லை.

டிக்கெட்டை வாங்கிக்கொண்டு கிளம்பினான். கோவிந்தராஜன் சன்னிதிக்கு நாங்கள் போவதற்கும் அர்ச்சகர் கதவை இழுத்துப் பூட்டிக்கொண்டு வெளியே வருவதற்கும் சரியாக இருந்தது. சுந்தரம் எதிர்பார்த்தபடியே பரிமளம் உற்சாகமிழந்து, வேதனை சூழ, கண்கலங்கிப் போய் நின்றாள். அவனுக்கு அதில் திருப்தி!

ஒப்புக்காக, ''போனால் போகிறது போ! அடுத்த தடவை வருகிறபோது, சேவித்துக் கொள்ளலாம். முக்கியமான பெருமாள் சேவைதான் உனக்குத் திருப்தியாகக் கிடைத்துவிட்டது'' என்றான்.

''ஊர், ஊர்னு உங்களுக்கு ஒரே குறி. ஊரிலே என்ன காணியாட்சி வைத்திருக்கிறது உங்களுக்கு? எங்கே ஓடிப்போய்விடும் அந்த மகா ஊரு? வருஷக் கணக்காகக் கோடித்து, இப்போது கிடைத்திருக்கிறது இந்தத் திவ்விய தேச யாத்திரை. இதையும் மூளியாக்கிவிட்டேளே. புண்ணியமா, புருஷார்த்தமா? என்ன அப்படிப் பறப்பு? உங்க அல்பத்தனம் இங்கே வந்தும் விடல்லியே!'' கையிலிருந்த பையை அப்படியே எறிந்துவிட்டு, படியில் உட்கார்ந்துவிட்டாள். இலேசான கேவல் ஒலி எழுந்தது.

''போடி, அசடு! நாலைந்து மாசத்துக்குப் பிறகு மறுபடியும் வந்தால் போகிறது. இதுக்குப் போய்ப் பிரமாதமாய்....'' என்று சமாதானப்படுத்திவிட்டு, சிதறி விழுந்திருந்த பையை எடுக்கத் திரும்பினான் சுந்தரம்.

வெளியே ஒரு காகிதப் பை கிடந்தது. அதில் புதிய சிறு சட்டை இருந்தது. ''இது ஏது?'' என்று சொல்லி வெளியே எடுத்தான். அதிலிருந்து இரு பத்து ரூபாய் நோட்டுகள் விழுந்தன.

சுந்தரம் அதிர்ந்து போய், ''இது ஏதுடீ சட்டை?'' என்றான். முகத்தைப் புதைத்துக் கொண்டிருந்த பரிமளம் தலையைத் தூக்கவில்லை; பதிலும் சொல்லவில்லை.

''ஏய்! இந்தப் புதுச் சட்டை ஏதுங்கிறேனே, காதில் விழவில்லே?''

முகத்தைத் தூக்கினாள் பரிமளம். புருஷனின் முகம் பரிதாபமாக மாறியிருப்பதைக் கண்டதும், விசனமெல்லாம் அவளுக்குப் பறந்துவிட்டது. உற்சாகத்துடன் ''வேங்கடி கொடுத்தாள். அவள் பிள்ளைக்கு இரண்டு நாள் கழித்துப் பிறந்த நாளாம். அதுக்காக வாங்கி வைத்திருந்த சட்டையை ராஜுவுக்குத் தன் ஞாபகமாக இருக்கட்டும் என்று கொடுத்தாள். ஆசையாய்க் கொடுக்கிறதை மறுப்பானேன்?'' என்றாள்.

''இந்தப் பணம்?''

''அது எனக்குத் தெரியாதே. உங்க குணம் தெரிந்து திருப்பி யிருக்கிறாள். சட்டைப் பைக்குள் வைத்து மடித்துப் பொட்டலமாகக் கொடுத்திருக்கிறாள்! நான் எதைக் கண்டேன்? இப்போ நீங்க செய்த சவரணைக்கு இது ஒண்ணும் குறைந்து போய் விடவில்லே!''

''சீ! தரித்திரம்!'' என்று இரைந்து, புதுச் சட்டையைப் பரிமளத்தின் முகத்தில் எறிந்தான் சுந்தரம்.

தாயின் முகத்தில் பட்டுக் கீழே நழுவ இருந்த சட்டையைத் தாவிப் பிடித்துக் கொண்டான் ராஜு. அதிலிருந்து பழைய கவர் ஒன்று பறந்து வந்து சுந்தரத்தின் காலடியில் விழுந்தது. அதன் மேல் சுந்தரத்தின் பெயர், கும்பகோணம் விலாசம், அதற்கு மேல் 'பிழைப்பு' என்கிற எழுத்து எல்லாம் காட்சி தந்தன.




உலகம் பொய்; இப்படிச் சொல்வதே ஒரு பொய். உலகம் அழியக் கூடியது; இப்படிச் சொல்வதுமே பொய். இவ்வுலகைப் படைத்தவன் மெய்யானவன், அழிவற்றவன், எங்கும் நிறைந்தவன், எதுவும் செய்யும் ஆற்றல் மிக்கவன் என்றால், அவனது அம்சமாகத் திகழும் எதுவுமே மெய்யாகத்தானே இருக்க வேண்டும்?

உலகம் கனவைப் போன்றது. இந்தக் கற்பனையை உண்மை என்றால், அது யாருக்கு? யார் இந்தக் கனவைக் காண்கிறானோ, அவனுக்குத்தானே? உலகம் கனவு என்னும் கனவுலகில் வாழ்பவர்கள் நாம் அல்ல. எனவே நம்மைப் பொறுத்த வரையில் இது பொய்யாக முடியாது; நாமும் பொய்யர்களாக மாட்டோம்.

உலகத்தின் அம்சம் நாம். உலகம் கனவென்றால் அந்தக் கனவின் அம்சமும் ஆவோம். இன்னும் பார்க்கப் போனால் இப்படிக் கனவு காண்பவர்களின் அம்சமும் ஆகிவிடுவோம் நாம்.

அந்நிலையிலும் எல்லாப் பொருளும் நசித்து விடாது; அழிந்து ஒழிந்து போகாது. ஆனால் ஒன்றிக் கலக்கும்; லயிக்கும்.

அப்பொழுது அவனுக்கும் நமக்கும் மிக்க நெருக்கமான தொடர்பு ஏற்படும்; இடையறாத தொடர்பு நிலை பெறும். எல்லையற்ற சக்தியை நாம் அநுபவபூர்வமாக உணர்வோம். நமக்கும் அவனுக்கும் எத்தகைய வேறுபாடும் இல்லை என்பதை அப்பொழுது நாம் கண்கூடாகக் காண்போம். நாம் எப்படியோ அப்படியேதான் அவனும் இருப்பான்; அவன் எப்படியோ அப்படியேதான் நாம் இருப்போம். ஆயினும் முழுமையான அவன் தனித்தேதான் இயங்குவான். புரியும் புதிராகத் தோன்றுபவன் புரியாப் புதிராகவேதான் திகழ்வான்.

ஃ ஃ ஃ

நீதிபதி (குற்றவாளியிடம்): உனக்கு என்ன வயது?

குற்றவாளி: நாற்பது.

நீதிபதி: நீ பத்து வருஷங்களுக்கு முன்பும் இதே வயதைத்தானே சொன்னாய்!

குற்றவாளி: எசமான்! நான் ஆண் பிள்ளை! ஆண் பிள்ளைக்கு நாக்கு ஒன்றுதான்! பேச்சை மாற்றிப் பேசும் வழக்கம் இல்லை.

ஃ ஃ ஃ

பையன்: ஏன் அம்மா! அந்தப் போலீஸ்காரர் ஒரு காலத்திலே என்னைப் போலச் சின்னக் குழந்தையாக இருந்திருப்பாரோ, இல்லையோ?

தாயார்: கட்டாயம் இருந்திருப்பார்! ஏன் கேட்கிறாய்?

பையன்: எனக்கு என்னைப் போலவே ஒரு சின்னக் குழந்தைப் போலீஸ்காரனைப் பார்க்கணும்னு ஆசையாக இருக்கு அம்மா!

ஆசிரியர்: பிராண வாயு எல்லாப் பிராணிகளுக்குமே அவசியமானது. அது இன்றி யாருமே உயிர் வாழ முடியாது. பிராண வாயு கண்டு பிடிக்கப்பட்டு ஏறக்குறைய நூறாண்டுகள்தான் ஆகின்றன.

மாணவன்: ஏன் சார்! அப்படியானால் பிராணவாயு கண்டு பிடிக்கப்படுவதற்கு முன் மக்கள் எப்படி உயிர் வாழ்ந்திருப்பார்கள்?

ஃ ஃ ஃ

புனித கங்கை கிழக்கு நோக்கி ஓடுகிறது. நர்மதை மேற்கு நோக்கிப் பாய்கிறது. மகாநதி தெற்கேயிருந்து வடக்கு நோக்கிச் செல்கிறது. வெவ்வேறு ஆறுகள் வெவ்வேறு திக்குகளில் ஓடுகின்றன. ஆனால் எல்லாமே கடைசியில் கடலில்தான் போய்க் கலக்கின்றன. சேரும் இடம் ஒன்று என்ற எண்ணம் நதிகளுக்கு ஏற்படுவதில்லை. அவை எந்தத் திசை நோக்கிச் சென்றாலும் கடல் அவற்றைச் சூழ்ந்து தன்னில் ஐக்கியப்படுத்திக் கொண்டு விடுகிறது.

அதே போல் மக்கள் ஆண்டவனைப் பலவகைகளில் வழிபடுகிறார்கள். அவர்கள் வழிபடும் முறைகள் வெவ்வேறானவையாக இருந்த பொழுதிலும் அவர்களால் அடையப்படும் ஆண்டவன் ஒருவனே. நமக்குப் பிடித்தமான எந்த வழியிலாவது சென்று அவனை அடைய முயலலாம். ஆனால் வெவ்வேறு வழிகளில் செல்லும்பொழுது திசை தப்பிவிடக் கூடாது. ஆண்டவன் ஒருவனே, அவனை அடைந்தே தீருவோம் என்ற உறுதியுடன் முன்னேற வேண்டும். வழி தவறித் திரியக் கூடாது. அது ஆனந்தம் பயக்காது.

ஃ ஃ ஃ

மிகப் பருமனான மனிதர் ஒருவர் தம் மனைவியுடன் சினிமா பார்க்கச் சென்றிருந்தார். இடைவேளைக்கு இருவரும் வெளியே சென்று தம் ஆசனத்துக்குத் திரும்பினர். திரும்புவதற்குள் விளக்கை அணைத்து விட்டார்கள். எனவே, தமது ஆசனத்துக்கு எப்படிப் போவது என்று தெரியாமல் விழித்த அவர் நாற்காலிகளின் வரிசையில் முதல் ஆசனத்துக்கருகே சற்றுத் தயங்கி நின்றார். பிறகு சிறிது யோசித்தவாறு அந்த நாற்காலியில் உட்கார்ந்திருந்தவரிடம், ''வெளியே போகும் பொழுது நான் உங்கள் காலை மிதித்து விட்டேனா, என்ன?'' என்றார்.

மன்னிப்புக் கேட்க விரும்புகிறார் என்ற எண்ணத்தில், மெய்யாகவே மிதிபட்ட அந்த ஆசாமி, ''ஆமாம், ஐயா! என் கால் தோல் கழன்று போகும்படி உமது ஆணிச் செருப்பால் அழுந்த மிதித்து விட்டீர்கள்'' என்று எரிச்சலுடன் கூறினார்.

அவருக்குப் பதில் சொல்லாமல் அந்தப் பருத்த மனிதர், தம் மனைவியைத் திரும்பிப் பார்த்து, ''சரிதான் வா. நாம் இந்த வரிசையில்தான் உட்கார்ந்திருந்தோம்'' என்றார்.

ஃ ஃ ஃ

இந்தச் சட்டங்களுக்குப் பேச மட்டும் வாய்ப்புக் கிடைத்தால், முதலில் குற்றவாளிகளைப் பற்றிச் சொல்லாது. ஆனால் வக்கீல்களுக்கு எதிராக வேண்டியது சொல்லும்.

—வார்ட் ஹாவிபாக்ஸ்

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# ஆக்ஸிஜனால் சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பு!

நீங்கள் போலிப் பற்களை அணிந்திருந்தால் 'ஸ்டெரடென்ட்' உபயோகித்து ஆக்ஸிஜனால் சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பை பெறுங்கள். அது, போலிப் பற்களை நன்றாகத் துலக்குகின்றது. 'ஸ்டெரடென்ட்' தண்ணீரில் கரைத்ததும் ஆக்ஸிஜன் கலந்த திராவகமாகி, சீக்கிரத்திலே போலிப் பற்களின் மிகச் சிறிய இடைவெளிகளுக்குள் புகுந்து உணவுப் பருக்கைகளை அப்புறப்படுத்துகிறது. பற்களில் படிந்துள்ள கறைகளையும் அழுக்குகளையும் கழுவி விடுவதுடன், தொத்து நோய் வராமலும் துர்நாற்றம் அடிக்காமலும் இருக்கச் செய்கின்றது. இதன் விளைவு, 'ஆக்ஸிஜனால்' சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பு-ஒளி மிகுந்த போலிப் பற்கள்!

## ஸ்டெரடென்ட்

ஆக்ஸிஜன் முறை போலிப்பல் துலக்கி

கடிதம் எழுதினால் இலவச சாம்பிள் அனுப்பப்படும்

விலாசம்: அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்

ஜி.பி.ஓ. பாக்ஸ் நம். 921, கல்கத்தா-1




பழைய வல்கனைட் போலிப் பற்களுக்கும் புதியதான ப்ளாஸ்டிக் வகைகளுக்கும் 'ஸ்டெரடென்ட்' சமமாகவே பயன்படுகிறது.



JWTST 2R

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon




கைப்பட சலவை செய்து பார்த்தீர்களானால் தெரியும் கைகண்ட ஸர்ப் மேன்மை: நிகரில்லாத வெண்மை, சிகரமான தூய்மை; வேலையோ வெகு இலகு! எல்லாம் ஸர்ப் செயல், எல்லைமீறிய வல்லமை. சட்டை, சேலை முதல் சிறுவர் உடை வரை எல்லாத் துணிகளுக்கும் ஏற்றது ஸர்ப்!

# ஸர்ப் சலவை : வெள்ளைவெளேர் சலவை

SU. 43-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு